ISSN: 2455 - 0531
UAN: TN0300061112

# இனம் INAM

பல்துறைப் பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ்

Since 2015 முதல்

Multi Diciplinary International E- Journal of Tamil Studies

பிப்புருவரி, மே, ஆகட்டு, நவம்பர் மாதங்களில் வெளிவரும் | Published in February, May, August and November

மலர்: 09, இதழ்: 36, நவம்பர், 2023 | Vol.: 09, Issue: 36, November, 2023



- அற இலக்கியப் பதிவுகளில் காமன் என்னும் தொன்மம்
- வள்ளலார் திருவருட்பா தெலுங்கு மொழிபெயர்ப்பு - பன்முகப்பார்வை

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

# உள்ளடக்கம்......

## Index..........

**அற இலக்கியப் பதிவுகளில் காமன் என்னும் தொன்மம் Khaman Myth in Moral Literature.......1**

முனைவர் மூ. பாலசுப்பிரமணியன் | Dr. M. Balasubramanian

**மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்துவதில் பெற்றோரின் பங்களிப்பு (பட்டிருப்பு வலய, மண்முனை தென் எருவில் பற்றுக் கோட்ட 1 AB, 1C, வகை - 2 பாடசாலைகளை அடிப்படையாகக் கொண்ட ஓர் அளவை நிலை ஆய்வு) The involvement of parents in enhancing the knowledge of students who excel in learning......................................................11**

ஒய். அகல்யா | Y.Ahalya , பி.சோபா | B.Soba

**வள்ளலார் திருவருட்பா தெலுங்கு மொழிபெயர்ப்பு - பன்முகப்பார்வை Vallalar Thiruvarutpa Telugu Translation - Multiview.................................................................................................................23**

சத்தியராஜ் தங்கச்சாமி | Sathiyaraj Thangasamy

**க.பொ.த உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் வினைத்திறனின்மையானது, அவர்களின் எதிர்கால செயற்பாடுகளில் ஏற்படுத்தும் தாக்கம் The Impact on the G.C.E A/L students due to lack of guidance on professional skills.......................31**

இராசையா தேவேந்திரன் | Rassaiah Devendran

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

# அற இலக்கியப் பதிவுகளில் காமன் என்னும் தொன்மம் Khaman Myth in Moral Literature

**முனைவர் மூ. பாலசுப்பிரமணியன் | Dr. M. Balasubramanian**

இணைப் பேராசிரியர், தமிழியல்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர் 608 002. Associate Professor, Tamil Studies & Research, Annamalai University, Annamalai Nagar 608 002, nellaibaalaa@gmail.com, 9488013050

DOI: 10.5281/zenodo.10222560

**ஆய்வுச்சுருக்கம்:** பாடுபொருளால் அற இலக்கியங்கள் என வரையறுக்கப்படும் இலக்கியப் பனுவல்கள் களப்பிரர் காலத்தில் மிகுதியாகத் தோன்றியுள்ளன. இவ்விலக்கியங்களில் பெரும்பாலும், சமண பௌத்தக் கருத்தியல்களைக் காண முடியும். அவ்விலக்கியங்கள் நிலையாமைத் தத்துவத்தை முன்னிறுத்தி; சிற்றன்பச் செயல்களைக் கண்டிக்கின்றன. காமம் என்னும் காதல் உணர்வைத் தீமை விளைவிக்கும் கருவியாகக் கருதியுள்ளன. காமத்தைத் தெய்வமாக உருவகப்படுத்திக் காமனாகப் பார்த்த சங்க இலக்கியங்கள் போலல்லாமல், காமமாகவே கருதி வெறுத்து ஒதுக்கியுள்ளன. இயற்கையான காம நடவடிக்கைகளைக் கூட வெறுக்கின்றன. சங்க இலக்கியங்களை ஒப்பிடுகையில் 'காமன்' என்னும் தொன்மத்தை அற இலக்கியங்கள் மிகக் குறைவாகவே கையாண்டுள்ளன.

**Abstract:** Literary works, defined as moral literature through poetry, flourished during the Kalaprara period. These writings often embraced Jain and Buddhist ideologies, prominently featuring the theory of impermanence. Within these texts, there is a distinct condemnation of sexual activities, portraying the feeling of love, known as Kama, as an instrument of evil. In contrast to Sangam literature, which revered Kama as a deity (Kaman), this literature deemed it as Kama and rejected it outright. There is a notable aversion even to natural sexual activities. Unlike Sangam literature, which extensively explored the myth of 'Kaman,' the literature of this period has dealt with it sparingly, particularly in the context of moral teachings.

**திறவுச் சொற்கள் (Keywords):** காமன், காதல், மன்மதன், காமவேள், காமம், அற இலக்கியங்கள், சங்க இலக்கியங்கள், சமணம், பௌத்தம், சைவம், வைணவம், வைதீகம், நாட்டுப்புற நம்பிக்கை, நாட்டுப்புற வழிபாட்டு மரபு, Love, Kaman, Manmathan, Kamavel, Kamam, Kalapira Era, Moral Literature, Sangam Literature, Jainism, Buddhism, Saivism, Vaishnavism, Vaidika, Folk belief, Folk worship tradition

## முன்னுரை

காதல் எல்லா உயிர்களுக்குமானது; இனப்பெருக்கத்தை நோக்கமாகக் கொண்டது. அக்காதல் உணர்வுகளுக்கு அளிக்கப்படும் மதிப்பே ஓர் இனத்தின் தனித்த அடையாளமாகவும் உயர்ந்த பண்பாடாகவும் கருதப்படும். இந்தியச் சமூகம் காதல் என்ற உணர்வு, 'காமன்' என்னும் தெய்வத்தால் உருவாகிறது என்று நம்புகின்றது. காமத்தைத்

தெய்வமாகக் கருதும் அச்சமூகம், காமம் மனித நடத்தைகளுக்கெதிரானது என்றும் சிற்றின்பம் என்றும் குற்றமும் சாட்டுகின்றது. காதல் உணர்வைக் கொண்டாடி, போற்றி வாழ்ந்த தமிழர்கள், அதனைத் தெய்வமாகவும் கருதியுள்ளனர். உலகின் அனைத்துச் செயல்பாட்டிற்கு ஏதோ ஒரு தெய்வம்தான் காரணம் என நம்பும் நம்மவர்கள், காமத்திற்கும் தெய்வம்தான் காரணம் எனவும் நம்பியுள்ளனர். வரன்முறை மீறிய காமம் சமூகத்தில் விளைவுகளை ஏற்படுத்திய போது, மனிதனின் ஆசைகளைக் கட்டுப்படுத்த முனைந்த தத்துவவாதிகள், காதல் என்னும் காமத்தை வெறுத்து ஒதுக்கியுள்ளனர். அதனால், காமன் இந்திரனாக்கப்பட்டுள்ளான். மேலும், காம உணர்வைச் சிற்றின்பம் என்ற பெயரில் இந்தியச் சமயங்களும் கடிந்துரைத்து, இந்திரனையும் வழிபாடு மரபிலிருந்து அகற்றியுள்ளன. என்றாலும், காமத்தைத் தெய்வமாகக் கருதி வழிபடும் வழக்கம் இருந்து வருகிறது. இங்ஙனம் காமன் குறித்த தொன்மக் கருத்தியலையும் காமத்தையும் அற இலக்கியம் பாடுமாற்றை இக்கட்டுரை ஆராய்கின்றது.

**காமன் – தொன்ம விளக்கம்**

மக்கள் நிராசையினால் அகத்தூண்டுதலுக்கு ஆட்பட்டுப் புனைந்துரைகளின் வழிக் கற்பனைப் பாத்திரங்களை உருவாக்குவர். அப்பாத்திரங்களின் இறுகிய வடிவமே தொன்மங்கள் எனப்படும். இயற்கையிறந்த நிகழ்வுகளாலும், மீவியற் கற்பனையாலும் தொன்மங்கள் தோற்றம் பெறுகின்றன. வீரர்கள், தலைவர்கள், அரசர்கள், தெய்வங்கள், புராணப் பாத்திரங்கள் குறித்த பழமரபுக் கதைகள் தொன்மங்களாக உருப்பெற்றுள்ளன. அங்ஙனம், காம உணர்வுகளின் வெளிப்பாடாய்த் தோன்றிய காமனைத் தொன்மமாக நோக்கலாம். இயற்கையாக மனிதனில் உருவாகும் காம உணர்வை, தெய்வம் உருவாக்குகிறது என்று இந்தியர்கள் நம்பியுள்ளனர். காமத்தை உருவாக்கும் தெய்வத்தைக் 'காமன்' என்றனர். காமன் தோற்றம் குறித்துப் புராணங்கள் பல கதைகளைக் கூறியுள்ளன. தர்மனின் மகன் என்று மகாபாரதத்தின் ஆதிபருவம் (பாகம் 66) கூறுகின்றது. பிரம்மனிடமிருந்து தோன்றியதாகவும், திருமாலின் மகன் என்றும் சில புராணங்கள் கூறுகின்றன. காமன் அழகான இளைஞனாகவும், அவன் கரும்பு வில்லைக் கொண்டு, மலர் அம்புடன் கிளி வாகனத்தில் வலம் வருவதாகவும், அவன் மனைவி ரதி என்றும் கூறியுள்ளன.

ஆசைகள் இல்லா மனிதனில்லை. மனிதனிடம் இயல்பாக எழும் காம உணர்ச்சியைப் புராணங்கள் தெய்வத்தின் செயல் எனப் புனைந்துரைக்கின்றன. அதனாலேயே, அத்தொன்மத்தைக் 'காமன்' என்றனர் போலும். காமனை, 'மதனன், மன்மதன், மாரன், ப்ரத்யூமனன், மீனகேதனன், கந்தரவன், தார்பகன், அனங்கன், காமன், பஞ்சாக்ஷரன், சாம்பராரி, மனசிஜன், குசுமேசு, அனன்யஜன், புஷ்பதன்வன், ரதிபதி, மகரதுவாஜன், ஆத்மபூஷன், இரஜன், இம்சன், கிங்கரன், அபிரூபன், ருதுகாலகேலன், காஞ்சனன், ரமணன், திபாகன், மதுதீபன், சமந்தகன், முகிரன், ருபஸ்த்ரன், வாமன், புஷ்பகேதனன், மகரகேது, ரதிநாயகன், ரகுவர்த்தனன், சம்சரகுரு, கடாயிதுனு, மபதியன், மாயன்' எனப் பல பெயர்களில் அப்புராணங்கள் அழைக்கின்றன. இப்பெயர்களின் வழி இந்தியச் சமூகத்தில் காமன் தொன்மம் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளமை விளங்கும்.

காமம் இயற்கை என்றாலும், ஞானம் பெறுவதைத் தடுக்கும் பகையாகக் கருதி காமனைச் சத்ருவாகவே புராணங்கள் சித்திரித்துள்ளன. யோகத்திலிருந்த சிவனின் மீது மலரம்பு எய்தமையால், அவரின் கோபத்திற்குக் காமன் ஆளானான் என்றும், சிவன் காமனைத் தனது நெற்றிக்கண்ணால் அழித்தான் என்றும் கூறுகின்றன. அதனால் சிவபெருமான், 'காமகோபன், காமனைக் காய்ந்த கண்ணுதற் கடவுள்' என்று போற்றப்படுகிறார். காமன் அழிப்பைச் சைவத் திருமுறைகள் 'காமதகனம்' என்று

பலவிடங்களில் பேசியுள்ளன. புராண இதிகாசங்கள் மட்டுமின்றி காமன் குறித்த தொன்மக் கதைகள் மக்கள் வழக்கிலும் காணப்படுகின்றன. நாட்டார் காமன் வழிபாட்டை மக்கள் செல்வம் குறித்த நம்பிக்கையோடு இன்றும் மேற்கொண்டு வருவதைக் காண முடிகின்றது.

**காமன் குறித்த இலக்கியப் பதிவுகள்**

இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலும் காமன் குறித்த கதையாடல்களும், புராண, இலக்கியக் குறிப்புகளும் காணக் கிடைக்கின்றன. தமிழின் பண்டைய இலக்கியங்கள் தொடங்கி நவீன இலக்கியங்கள் வரை 'காமன்' பல்வேறு பெயர்களாலும் தொன்மக் கதைகளாலும் பேசப்பட்டிருக்கிறான். காமன் குறித்த இலக்கியப் பதிவுகள் காமத்தைப் போற்றும் விதமாகவும், தூற்றும் விதமாகவும் அமைந்திருக்கின்றன. காதலைக் கொண்டாடிய சங்க இலக்கியங்கள், காதலின் மேன்மையை உணர்த்த காமன் தொன்மத்தைக் கையாண்டுள்ளன. பண்டையக் காலத்தில் காமனுக்கு விழாவும் எடுக்கப்பட்டுள்ளது. அதனை, 'உள்ளி விழா' என்ற பெயரில் கொண்டாடியுள்ளமையை,

"... ... ... கொங்கர்
மணி அரையாத்து மறுகின் ஆடும்
உள்ளிவிழவு அன்ன" (அகநானூறு, பா. 368)

என்ற அகநானூற்று அடிகள் மெய்ப்பிக்கின்றன. இறையனார் களவியல்,

"கருவூர் உள்விழாவே" (இறையனார் களவியல் உரை, நூ. 16-17)

என்ற குறிப்பைத் தருகின்றது. அவ்விழா நடைபெறுகிற போது அரண்மனைகளில் காமனுக்குரிய மீன்கொடி ஏற்றியிருந்தமையை மற்றொரு அகநானூற்றுப் பாடல் பதிவு செய்துள்ளது. அதனை,

"நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆல முற்றம் கவின்பெறத் தைஇய
பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர்
கைசெய் பாவைத் துறைக்கண் இறுக்கும்
மகர நெற்றி வான்தோய் புரிசைச்
சிகரம் தோன்றா சேணுயர் நல்இல்" (அகநானூறு, பா.181)

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. மேற்கண்ட பாடலால் தமிழ்ச் சமூகத்தில் காமன் கொண்டாடப்பட்டுள்ளமையை அறிய முடிகின்றது. கலித்தொகையின்,

"நான்மாடக்கூடல் மகளிரும் மைந்தரும்
தேன்இமிர் காவில் புணர்ந்திருந்து ஆடுமார்,
ஆனா விருப்போடு அணி அயர்ப, காமற்கு
வேனில் விருந்து எதிர்கொண்டு" (கலித்தொகை, பா.92:65-68)

என்னும் பாடலடிகள் காமனுக்கு இளவேனில் காலத்தில் விழாக் கொண்டாடியதைப் புலப்படுத்துகின்றன. மேலும், கலித்தொகையின், 94:33, 108:4, 109:19,147:59&60 அடிகளும், பரிபாடலின் 8:119, 10:97, 11:123, 18:28 அடிகளும் காமன் பற்றியத் தொன்மத்தை விளக்குவனவாக உள்ளன. காமனின் மனைவி ரதியைப் பற்றி,

"இரதி காமன், இவள் இவன்' எனாஅ
விரகியர் வினவ, வினா இறுப்பொரும்" (பரிபாடல்., பா.19:48&49)

என்ற பரிபாடல் அடிகளும், காமனின் தம்பியைப் பற்றி,

> "மீன் ஏற்றுக் கொடியோன் போல், மிஞிறு ஆர்க்கும் காஞ்சியும்,
> ஏனோன் போல், நிறம் கிளர்பு கஞுலிய ஞாழலும்,
> ஆன் ஏற்றுக் கொடியோன் போல், எதிரிய இலவமும், ஆங்கு," (கலி., பா.26:3-5)

என்ற கலித்தொகை அடிகளும் பேசியுள்ளன. ஒவ்வொரு மனிதனுக்குக் காதல் உணர்வை மன்மதன் என்னும் காமன் உருவாக்குவதாக அரிச்சந்திர புராணம் கூறியுள்ளது. அப்புராணம்,

> "திங்கள்வெண் குடைக்கீழ்த் தென்றற் றேர்மிசை ஏறி வாரி
> மங்கல முரசம் ஆர்ப்ப மகரகே தனநின் றோங்கக்
> கங்குல்வெங் களிறு சூழக் கடுங்கிளிப் புரவி தூண்டி
> அங்கண்மா ஞால மெல்லாம் அனங்கவேள் பவனி வந்தான்." (அரிச்சந்திரபுராணம்)

எனப் பாடியுள்ளது. மீன்கொடி தேரில் காமன் ஊர்வலம் செல்வதைச் சிலப்பதிகாரம்,

> "அரையிருள் யாமத்தும் பகலும் துஞ்சான்
> விரைமலர் வாளியொடு கருப்புவில் லேந்தி
> மகர வெல்கொடி மைந்தன் றிரிதர
> நகரங் காவல் நனிசிறந் ததுவென்." (சிலப்பதிகாரம்)

எனப் பதிவு செய்துள்ளது. கம்பராமாயணம்,

> "கன்னல் வார் சிலை கால் வளைத்தே மதன்
> பொன்னை முன்னிய பூங் கணை மாரியால்
> என்னை எய்து தொலைக்கும் என்றால் இனி
> வன்மை என்னும் இது ஆரிடை வைகுமே?" (கம்பராமாயணம்)

எனக் காமன் மலர் அன்பு பொழியும் திறத்தை விவரித்துள்ளது. இங்ஙனம் தமிழ் இலக்கியங்கள் காமனைக் கொண்டாடியுள்ளன. காமத்தைத் தரும் தொன்மமாகவே தமிழ் இலக்கியங்கள் பாடியுள்ளன. ஆனால், காலமாற்றத்தால் கொண்டாடப்பட்ட காமன் என்னும் மன்மதன் தீக்கடவுளாகச் சித்திரிக்கப்படலானான். காமத்தைக் கொண்டாட்டத்திலிருந்து சிற்றின்ப நிலைக்குத் தள்ளிய சமண, பௌத்த கொள்கையைச் சைவ வைணவ சமயங்களும் ஏற்றுக் கொண்டு காமனைக் கடிந்துரைத்தன. மேலும், வழிபாட்டு நிலையிலிருந்து அகற்றி, சிந்தனை மரபில் எதிர்மறையான பாத்திரமாகக் காமன் மாற்றப்பட்டான்.

## தமிழர் வாழ்வில் காமன்

தமிழர்கள் வாழ்வியலை அகம், புறம் எனப் பகுத்துக் காதலுக்கு முதலிடம் கொடுத்துள்ளனர். அதனை, "இன்றமிழ் இயற்கை இன்பம்" (சீவகசிந்தாமணி, பா.2003) எனச் சீவக சிந்தாமணி கூறுவதன் வழி அறியலாம். மனித இயல்பான இயற்கை உணர்வுக்கு மதிப்பளித்துக் காதல் சார்ந்த திருமணங்களையே மேற்கொண்டுள்ளனர். அதனால் காமனுக்குச் சங்க காலத்தில் விழா எடுக்கப்பட்டுள்ளது. அத்தகைய காமன் விழா 'இந்திர விழா' என மாறியதை இரட்டைக் காப்பியங்கள் எடுத்தியம்புகின்றன. (சிலம்பு.1:6:1-6, மணிமேகலை. 1: 65-72) இம்மாற்றத்தை,

> 'காமன் விழா 'இந்திரன் விழா' எனப் பெயர் மாறியதும் அந்த விழாவில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. காமனுக்குப் பதிலாக இந்திரன் அவ்விழாவின் நாயகன்

> ஆனான். மழை வேண்டியும் பயிர் செழிக்கவும் என விழாவின் கருத்து கருப்பெற்றது." (எஸ்.சாந்தினிபீ, (வரலாற்றுத் துறைப் பேராசிரியர்) காமன் விழா: தமிழர்கள் கொண்டாடிய காதலர்கள் தினம், இந்து தமிழ், 14 பிப். 2019)

என்னும் கருத்தால் உணரலாம்.

ஆசையை உருவாக்கிய காமன், 'இந்திரன்' என்ற பெயரில் பெண்பித்தனாக உருவகப்படுத்தப்பட்டான். இந்திரன் ஆனதும் வழிபாட்டிலிருந்து அகற்றும் நிலைக்குத் தள்ளப்பட்டான். என்றாலும், கொண்டாட்ட மனநிலைக் கொண்ட தமிழர்கள், காமனைத் தொன்மமாகக் கதையாடத் தொடங்கியுள்ளனர். இலக்கியங்களும் வேறுவேறு பெயர்களில் பதிவு செய்துள்ளன. சமணம், பௌத்தம், சைவம், வைணவம் போன்ற பெரும் சமயங்கள் காமனை ஒதுக்க, நாட்டார் வழிபாட்டு மரபில் தமிழக மக்களால் வணங்கப்படலானான். காமன் வழிபாடு, 'மன்மதன் விழா, காமன் தகனம், களப்பலி, காமன் பண்டிகை' எனப் பல பெயர்களில் தை, மாசி, பங்குனி மாதங்களில் இன்றும் தமிழர்கள் வாழும் நாடுகளில் நடைபெறுவதை அறிய முடிகிறது. சிறுதெய்வ வழிபாட்டிற்குரிய மரபுகளின்படி இவ்விழாக்கள் நடைபெறுவதைக் கள ஆய்வின் வழி அறிய முடிந்தது. இவ்விழாக்கள் 'ஆடல், பாடல், பலியிடல், ஒப்பாரி, உயிர்ப்பித்தல்' என்கிற முறையில் நடைபெறுகின்றன. (பிரேம்குமார், மன்மதன் ஒப்பாரி, சென்னைப் பல்கலைக்கழகம், 2004) இவ்வழிபாடு இன்று சைவ சமயப் பின்னணியோடு நடைபெறுவதையும் காண முடிகின்றது. தமிழர்கள் வாழும் இலங்கையிலும் இவ்வழிபாடு கூத்துமுறையில் நடத்தப்படுகிறது. மலேசிய நாட்டில் 22 நாட்கள் 'காமடி திருவிழா' என்கிற பெயரில் இப்பொழுதும் நடைபெறுகின்றது. 'காமண்டி திருவிழா' என்பது மருவி 'காமடி திருவிழா' என வழங்கப்படுகிறது. (நூநவிலன், காமன் திருவிழா எனும் காமடித் திருவிழா, yal.com, June 9, 2019) இங்ஙனம் கற்பனைப் பாத்திரமான காமன் தவிர்க்கவியலா தொன்மாகத் தமிழர்கள் வாழ்வியலோடும் நம்பிக்கையோடும் கலந்துவிட்டான். காமன் வழிபாட்டின்போது, 'ஒப்பாரி, லாவணி, கணியான் கூத்து, பாவைக்கூத்து, வில்லுப்பாட்டு, தெருக்கூத்து' எனப் பல கலை வடிவங்களிலும் காமன் கதை பாடப்படுகிறது. (சதீஷ் அ., காமன் கதைப்பாடல், சென்னைப் பல்கலைக்கழகம், 2005)

பாலியல் கல்விக்கான ஏற்பாடாகக் காமன் வழிபாட்டை நோக்க முடியும். மன்மத வழிபாட்டில் ஆண்கள் மட்டும் பங்கெடுக்கும் வழக்கமும், அப்பொழுது ஆண்கள் ஆடைகளின்றி கதையாடுவதையும் கட்டுரையாளர் கள ஆய்வில் அறிந்துள்ளார். இவ்வழிபாடு மயானக் கரைகளில் நடைபெறுவது குறிப்பிடத்தக்கது. மதுரை வட்டாரத்தில் ஆண்கள் மட்டும் நடத்தும் முத்தையா, கருப்பசாமி வழிபாடுகளை மன்மத வழிபாட்டோடு இணைத்துப் பார்க்க முடியும். மேலும், பெண்கள் நடத்தும் ஔவை நோன்பு வழிபாட்டோடு காமன் வழிபாடு என்னும் மன்மத வழிபாட்டை ஒப்பு நோக்கலாம். இரண்டு வழிபாடுகளும் மக்களுக்கான பாலியல் விழிப்புணர்வாகக் கொண்டு ஆராய வாய்ப்பிருக்கிறது. இவ்வாறாகக் காமன் தொன்மம் தமிழர்களிடம் பெற்றுள்ள மதிப்பை உணரலாம். இது தமிழர்கள் காதல் உணர்வுகளுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தைப் புலப்படுத்துகிறது.

**அற இலக்கியங்களில் காமன் என்ற காமம்**

சங்க மருவிய காலத்தில் தோன்றிய நீதிநெறி சார்ந்த இலக்கியங்களை 'அற இலக்கியங்கள்' என்ற வகைமைக்குள் அடக்குவர். சங்க காலத்திலேயே அறம் சார்ந்த கருத்துகளைப் பேசும் புற இலக்கியங்கள் தோன்றினாலும், சங்க மருவிய கால இலக்கியங்களையே அற இலக்கியங்கள் என்பர். காரணம் புற இலக்கியம் பேசும் பாடுபொருள் வரையறைக்குள் அறம் வந்தாலும், சமய அடிப்படையிலான அறக்

கருத்துக்களை இவ்விலக்கியங்கள் முன்வைக்கின்றன. சமணம், பௌத்தம் செழித்திருந்த காலமாகையால், அச்சமயக் கருத்துக்களையே அறமாக இவ்விலக்கியங்கள் கட்டமைக்கின்றன. அக்காலத்திய வைதீக சமயத்தைச் சார்ந்தோரும் அறத்தை முன்னிறுத்தியே பாடினர். ஆகையால், இவ்விலக்கியங்கள் அற இலக்கியங்கள் எனப்படுகின்றன. மேலும், அவ்விலக்கிங்கள் பேசும் அறக் கருத்துக்கள், சமயங்களின் சிந்தனைகள் என்பதையும் இங்கு நினைவில் கொள்ள வேண்டியுள்ளது. அந்தப் பின்னணியில் காமன் என்னும் தொன்மத்தையும் அறக் கொள்கையோடு ஒப்பிட்டு நோக்கி, பாடல்களில் புலவர்கள் கையாண்டுள்ளனர். நிலையாமையை வலியுறுத்தும் அவ்விலக்கியங்கள் காமன் என்னும் தொன்மத்தைக் கடிந்தே பதிவு செய்திருக்கின்றன.

காமனின் அழகைச் சங்க இலக்கியப் புலவர்கள் உயர்ந்த நிலையில் கையாண்டுள்ளனர். அற இலக்கியப் புலவர்கள் காமனைக் காமன், மன்மதன் என்னும் பெயர்களில் ஆசையை விளைவிப்பவன் என்ற பொருளில் குறிப்பிட்டுள்ளனர். வள்ளுவம், காமத்தை உண்டுபண்ணும் காமதேவனாகிய காமன் காதலர் இருவருக்குப் பொதுவாக நில்லாது ஒருவர் பக்கம் நின்று, மற்றொருவருக்கு வருத்தத்தையும் தடுமாற்றத்தையும் தருபவன் என்கிறது. அதனை,

“பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான்” (திருக்குறள், பா.1197)

என்னும் குறட்பாவால் அறியலாம். மேலும்,

“காமம் வெகுளி மயக்கம் இவையுன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். " (மேலது., பா. 360)

என்ற குறட்பாவில் ஒழுங்கீனங்களில் ஒன்றாகக் காமத்தைக் குறிப்பிடுகின்றது. காமத்தை உருவாக்கும் காமன் என்னும் தெய்வத் தொன்மத்தை அற இலக்கியங்கள் தவிர்த்துள்ளன. காமத்தைக் காமனோடு இணைத்துப் பேசாமல் காம உணர்வாக மட்டும் பேசியிருக்கின்றன. காம உணர்வால் ஏற்படும் தீமைகளைச் சுட்டுமிடத்தில் மட்டும் இச்சொல் கையாளப்பட்டுள்ளது. மனித மனத்தைக் காமம் கெடுப்பதாலும், பிறன்மனை நோக்குதலைத் தடுக்கவும் அற இலக்கியங்கள் காமத்தைக் கண்டித்தே பாடியுள்ளன. மேலும், களப்பிரர் காலத்தில் காமன் இந்திரன் வடிவம் கொண்டமையால் காமனைப் பாடாது இந்திரனைப் போற்றியுள்ளன. இப்பின்னணியில்தான் காமம் குறித்த பதிவுகளை அற இலக்கியங்களில் காண முடிகின்றது.

**காமத்தை அழகுணர்ச்சி கூட்டும்**

மனிதனுக்கு அழகுணர்ச்சி கூடாது. அது காம உணர்ச்சியை ஏற்படுத்தும் என்று அற இலக்கியங்கள் கூறியுள்ளன. நாலடியார் காமன் தொன்மத்தைக் காமம் என்று இணைத்துப் பேசுகையில் அழகுணர்ச்சியைக் கண்டித்துள்ளது.

“தோற்போர்வை மேலும் துளைபலவாய் பொய்ம்மறைக்கும்
மீப்போர்வை மாட்சித்து உடம்பானால் மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும். " (நாலடியார், பா.42)

என்னும் பாடலில் அழகுணர்ச்சி காமத்தை உண்டுபண்ணக்கூடியது என்றும் ஆகையால், உடலை விரும்பும் காமம் கூடாது என்றும் கூறுகின்றது. மீப்போர்வை என்னும் சட்டை

அணிவதைக் கண்டிக்கிறது. மற்றொரு பாடலில், அறிவுடையார் காம நினைவுக்கு ஆட்பட மாட்டார்; அங்ஙனம் ஆட்பட்டால் வெட்கம் கொள்வர் என்றும் கூறுகின்றது. அதனை,

"பரவா, வெளிப்படா, பல்லோர்கண் தங்கா;
உரவோர்கண் காமநோய் ஓ!ஓ! கொடிதே;
விரவாருள் நாணுப் படலஞ்சி யாதும்
உரையாதுள் ஆறி விடும்." (மேலது., பா.88)

என்னும் பாடலால் அறியலாம்.

**காமத்தை அறிவுடையார் விரும்பார்**

மனிதனுக்குள் காமநோய் தோன்றிய பிறகு அதனை அழிக்கவோ மறைக்கவோ முடியாது; அது மனத்தை உடைக்கும் இயந்திரம் போல் இயங்கும் தன்மையுடையது; காமம் தீயினும் கொடியது என்று களப்பிரர் காலம் கருதியுள்ளது. அதனால், அற இலக்கியங்கள் காமத்தைக் கடிந்துள்ளன. மேற்கண்ட கருத்தை,

"ஊருள் எழுந்த உருகெழு செந்தீக்கு
நீருள் குளித்தும் உயலாகும்; - நீருள்
குளிப்பினும் காமம் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினும் காமம் சுடும்." (மேலது., பா.90)

என்னும் பாடல் வழிக் கூறியுள்ளது. இங்ஙனம் காமனால் விளைவிக்கப்படும் காமம்தான் பிறன்மனையை நோக்க வைக்கிறது, ஆகையால், மக்கள் காமத்திற்கு ஆட்படாமல் ஒதுக்கி வைக்க வேண்டும் என்று அற இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

காமம் மனித இயற்கை என்றாலும் அறிவுடையார் காமத்தை வெளிக்காட்ட மாட்டார்கள் என்றும், தன் மனைவியிடத்தும் வெளிக்காட்டுவதற்கு வெட்கப்படுவர் என்றும் அற இலக்கியங்கள் கூறியுள்ளதால், களப்பிரர் காலம் காமத்தை வெறுத்து ஒதுக்கியுள்ளது எனலாம். காதல் என்னும் காமத்தை மூடர் தான் விரும்புவர். அறிவுடையார் விரும்ப மாட்டார்கள் என்று திரிகடுகத்தின்,

"பெருமை உடையார் இனத்தின் அகறல்,
உரிமையில் பெண்டிரைக் காமுற்று வாழ்தல்,
விழுமிய அல்ல துணிதல், - இம்மூன்றும்
முழுமக்கள் காத லவை." (திரிகடுகம், பா.9)

என்னும் பாடலால் விளக்குகின்றது. காமத்தைச் சான்றோர் விரும்பார் என்றும் (ஏலாதி, பா. 29) காம விளையாட்டில் களித்திருக்க மாட்டார் என்றும் (ஏலாதி, பா. 58) ஏலாதியும் கூறியுள்ளது.

**காமத்தை விரும்பும் பெண்டிர் விடம்**

காமத்தை விரும்பும் ஆண்களைக் கண்டிப்பதைப் போல் பெண்களையும் அற இலக்கியங்கள் கடிந்துள்ளன. ஆதிக்கச் சமூகமாக இருந்த களப்பிரர் காலம் பெண்களை அடிமைகளாகவே வைத்திருந்தது. சமயங்கள் பெண்களை ஒதுக்கியுள்ளன. காமத்தைக் காமன் என்னும் தெய்வம் தருவதாகச் சங்க காலம் நம்பியதை, அற இலக்கியங்கள் பேசாமல் பெண்களால்தான் காமத்திற்குச் சான்றோர்களும், அறிஞர்களும் ஆட்படுவதாகத்

தெரிவித்துள்ளன. அந்தவகையில் காமத்தை வழங்கும் பெண்கள் நஞ்சிற்கு இணையானவர்கள் என்று இனியவை நாற்பது கூறுகின்றது. அதனை,

"இளமையை மூப்பு என்று உணர்தல் இனிதே;
கிளைஞர்மாட்டு அச்சு இன்மை கேட்டல் இனிதே;
தட மென் பணைத்தோள் தளிர் இயலாரை
விடம் என்று உணர்தல் இனிது." (இனியவை நாற்பது, பா.37)

என்னும் பாடலால் அறிய முடிகின்றது.

**காமம் வீடுபேற்றைத் தடுக்கும்**

மனிதப் பிறப்பின் நோக்கம் வீடுபேறு. வீடுபேற்றை அடையும் வழியைச் சிந்திப்பதே வாழ்க்கை என்னும் கொள்கை களப்பிரர் கால சமயங்களால் முன்வைக்கப்பட்டன. வீடுபேற்றுப் பயணத்திற்கு இடையூறு விளைவிக்கும் பகையாகக் காமத்தை அடையாளப்படுத்தும் அற இலக்கியங்கள், அதனை ஒதுக்கி வைக்க வலியுறுத்துகின்றன. காமம் மனத்தின் அமைதியைக் கெடுத்து ஆசையை உண்டாக்கக் கூடியது; தனக்கான ஆயுதத்தைத் தானே உருவாக்கிக் கொள்வதற்குச் சமமாகும்; இத்தகைய எண்ணங்கள் மனிதனின் வீடுபேற்றை வேரறுக்கும் சக்தி படைத்தவைகளாகும். இக்கருத்தை,

"குழித்துழி நிற்பது நீர்; தன்னைப் பல்லோர்
பழித்துழி நிற்பது பாவம்; - அழித்துச்
செறுவழி நிற்பது காமம்; தனக்கு ஒன்று
உறுவுழி நிற்பது அறிவு." (நான்மணிக்கடிகை, பா.28)

என்னும் நான்மணிக்கடிகை பாடல் குறிப்பிடுகின்றது. அங்ஙனம் காமத்தை வெறுக்காமல் இருந்தால் மறுபிறப்புக் கிடைக்கும் என்று பழமொழி நானூறு கூறுகின்றது.

"திரியும் இடிஞ்சிலும் நெய்யும் சார்வாக
எரியும் சுடரோர் அனைத்தால் - தெரியுங்கால்
சார்வற ஓடிப் பிறப்பறுக்கும் அஃதேபோல்
நீரற நீர்ச்சார் வறும்." (பழமொழி நானூறு, பா. 219)

என்னும் பாடல் காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குணங்களோடு இருந்தால் பிறவி தலையெடுக்கும் என்று கூறுகின்றது. உடலைத் தின்று உயிரைக் குடிக்கும் ஆற்றல் காமத்திற்கே உண்டு என்று இன்னா நாற்பது பதிவு செய்துள்ளது. அதனை,

"ஏமம் இல் மூதூர் இருத்தல் மிக இன்னா;
தீமை உடையார் அயல் இருத்தல் நற்கு இன்னா;
காமம் முதிரின் உயிர்க்கு இன்னா; ஆங்கு இன்னா,
யாம் என்பவரோடு நட்பு." (இன்னா நாற்பது, பா. 24)

என்ற பாடல் வழி அறியலாம். மேலும், வயது முதிர்ந்து உடல் நடுங்கும் நிலையுடைய கிழவன் காமம் கொள்ளுதல் தவறு என்று முதுமொழிக் காஞ்சி கூறியுள்ளது.

"மிகமூத்தோன் காம நல்கூர்த் தன்று" (முதுமொழிக்காஞ்சி, 9:2)

என்னும் அடி அதனை உணர்த்தும். களப்பிரர் காலச் சமயங்கள் ஆண்களுக்கு மட்டுமே வீடுபேறு உண்டு என்ற கொள்கை கொண்டிருந்தன. அதனால், ஆண்கள் எவ்வயதிலும்,

எந்நிலையிலும் ஆட்பட்டுவிடக் கூடாது; காமத்திற்கு ஆட்பட்டால் வீடுபேறு அடையாமல் மறுபிறவி எடுக்க நேரிடும் என்று அற இலக்கியங்களும் பேசியுள்ளன. சங்க அக இலக்கியக் கொள்கையான 'ஏழு பிறவி' கருத்தியலோடு, காமம் இருந்தால் வீடுபேறு கிடையாது என்ற கோட்பாட்டை ஒப்பிட்டால் உண்மை விளங்கும்.

**காமத்தை அடக்கினாலும் வெளிப்படும்**

காமம் இயற்கை உணர்வு; அடக்கி வைத்தாலும் வெளிப்படும். ஆகையால், மனதாலும் காம எண்ணம் பிறக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று நான்மணிக்கடிகை பல பாடல்களில் வலியுறுத்துகின்றது. இச்செய்திகளை,

"செறுவழி நிற்பது காமம்; தனக்கு ஒன்று
உறுவுழி நிற்பது அறிவு." (நான்மணி., பா. 28)
'மறைக்க மறையாதாம், காமம்; முறையும்
இறை வகையான் நின்றுவிடும்." (மேலது.,பா.39)
"... .... காமம்; கரப்பினும்,
கொன்றான்மேல் நிற்கும், கொலை." (மேலது., பா.89)

என்னும் பாடல்கள் வழி அறியலாம். மனம் தான் காமம் தோன்றுவதற்கான அடிப்படை என்பதால் மனதிலும் காமம் தோன்ற கூடாது என்றும், மனத்தால் நினைத்தாலும் பாவம் என்றும் அற இலக்கியங்கள் பேசியுள்ளன. உடலைச் சார்ந்து மனம் இயங்குவதால், உடலை உறுதி செய்யும் உணவையும் அச்சமயங்கள் கடிந்துள்ளன.

**காமத்தைப் போற்றும் வள்ளுவம்**

அற இலக்கியங்களில் ஒன்றான திருக்குறள் அறத்துப்பால், பொருட்பாலில் காமத்தைக் கண்டிக்கின்றது. ஆனால், காமத்துப்பாலில் போற்றுகின்றது. பல அதிகாரங்களின் வழிக் காமத்தின் திறனையும் இனிமையையும் பேசியிருக்கின்றது. மேலும், ஆண் பெண் வாழ்க்கைக்கான அடிப்படையே காமம்தான் என்றும் கூறுகின்றது. காமத்தில் ஒழுக்கம் பேணப்படல் வேண்டும் என்றும், நெறியுடன் இருக்கும் பெண்களைப் போற்றி, ஒழுக்கம் மீறும் ஆண்களைக் கடிந்துரைக்கின்றது.

"உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது." (திருக்குறள், பா.1201)

"காமக் கடும்புனல் உய்க்கும் நாணொடு
நல்லாண்மை என்னும் புணை." (மேலது., பா.1134)

"உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு." (மேலது., பா.1281)

"உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது." (மேலது., பா.1326)

"மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார்." (மேலது., பா.1289)

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023

பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

போன்ற குறட்பாக்களை நோக்கினால் மேற்கண்ட கருத்துக்கள் விளக்கம் பெறும். அற இலக்கியங்கள் காமத்தை முழுமையாக ஒதுக்க, வள்ளுவம் போற்ற வேண்டிய இடத்தில் உயர்த்திப் பிடித்துள்ளது. சமூகத்தை நெறிப்படுத்த எண்ணிய வள்ளுவர், சமூக நடத்தைகளை நெறிப்படுத்த எண்ணியுள்ளாரே தவிர, காமத்தை முழுமையாக விட்டுவிட வேண்டும் என்று கூறவில்லை. மேலும், ஒத்த அன்புடைய காதல் வாழ்க்கையையும் போற்றி, காமநெறி தவறும் ஆண்களையும் பெண்களையும் கண்டிக்கவும் செய்கிறார்.

**முடிவுரை**

காமம் என்பது மனித வாழ்வின் அடிப்படை. அதனைத் தவறான வழியில் பெறுகிற போது சமூகத்தில் சிக்கல்கள் ஏற்படும். காமம் இதயத்தைத் துளைக்கும் அம்பு; அறிவைக் கெடுக்கும் ஆயுதம்; அறத்தை அழிக்கும் சாதனம்; மக்கள் மனதில் உலா வரும் தீய சக்தி என்று களப்பிரர் கள சமயங்கள் கூறியுள்ளன. இவ்வேட்கையை அடக்கி அறமான செயல்களைச் செய்து வாழவே 'காமன்' என்னும் தொன்மத்தை அற இலக்கியங்கள் தவிர்த்துக் காமத்தை மட்டும் முன்னிறுத்தியுள்ளன. காமம் தீயவற்றையே தனது பிறப்பிடமாகக் கொண்டு நிற்கும் இயல்புடையது என்பதால், அதனைக் களைந்து அறத்துடன் வாழ்ந்தால் மட்டுமே இப்பிறப்பில் வீடுபேறு அடைய முடியும் என்றும், வீடுபேறு அடைவதற்கான தகுதியைப் பெற முடியும் என்றும் அற இலக்கியப் புலவர்கள் கூறியுள்ளனர். வள்ளுவர் காமத்தைக் கண்டிக்க வேண்டியிடத்தில் கண்டித்து, போற்ற வேண்டிய இடத்தில் போற்றியிருக்கிறார். அற இலக்கியங்கள் காமத்தைக் காமன் விளைவிப்பதாகவோ, காமனைத் தெய்வமாகவோ பேசவில்லை. ஆனால், காமத்தை அனைத்து அற இலக்கியங்களும் கீழ்மையாகப் பேசியிருக்கின்றன. காமனின் மறுவடிவமாகக் கருதப்படும் இந்திரன் தொன்மம் இவ்விலக்கியங்களில் உயர்வாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**


1. சங்க இலக்கியங்கள் (2004) சென்னை: NCBH.
2. அரிச்சந்திரபுராணம் (1963) இலங்கை: தமிழ்நூற் பதிப்பகம்.
3. சிலப்பதிகாரம் (2014) சென்னை: தமிழ்மண் பதிப்பகம்.
4. மணிமேகலை (2005) சென்னை: பாரி நிலையம்.
5. சீவகசிந்தாமணி (2007) சென்னை: சீதை பதிப்பகம்.
6. கம்பராமாயணம் (2009) சிதம்பரம்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
7. இறையனார் களவியல் (2007) சிதம்பரம்: மெய்யப்பன் பதிப்பகம்.
8. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் (2007) சென்னை: மணிவாசகர் பதிப்பகம்.
9. அறவாணன், க.ப., (2008) அற இலக்கியக் களஞ்சியம், சென்னை: தமிழ்க் கோட்டம்.
10. பிரேம்குமார், (2004) மன்மதன் ஒப்பாரி, சென்னைப் பல்கலைக்கழகம்.
11. சதிஷ்,அ., (2005) காமன் கதைப்பாடல், சென்னை: சென்னைப் பல்கலைக்கழகம்.
12. எஸ்.சாந்தினிபீ, (வரலாற்றுத் துறைப் பேராசிரியர்) காமன் விழா: தமிழர்கள் கொண்டாடிய காதலர்கள் தினம், சென்னை: இந்து தமிழ், 14 பிப். 2019.
13. சந்திரசேகரன், இரா., (ப.ஆ.) (2003) நாட்டுப்புற வழிபாட்டு மரபுகளும் நம்பிக்கைகளும், கோவை: பாரதியார் நூலகம்.

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023

பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

# மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்துவதில் பெற்றோரின் பங்களிப்பு (பட்டிருப்பு வலய, மண்முனை தென் எருவில் பற்றுக் கோட்ட 1 AB, 1C, வகை - 2 பாடசாலைகளை அடிப்படையாகக் கொண்ட ஓர் அளவை நிலை ஆய்வு) The involvement of parents in enhancing the knowledge of students who excel in learning

**ஒய். அகல்யா | Y.Ahalya [1] , பி.சோபா | B.Soba [2]**

Department of Education & Childcare, Faculty of Arts & Culture, Eastern University, Sri Lanka.

yrahalya@gmail.co, sobab@esn.ac.lk

DOI: 10.5281/zenodo.10222662

**ஆய்வுச்சுருக்கம்**

“மெல்லக்கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்துவதில் பெற்றோரின் பங்களிப்பு” எனும் தலைப்பில் அமைந்த இவ் அளவை நிலை ஆய்வின் முக்கிய நோக்கம் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலில் பெற்றோர் பங்களிப்பிலுள்ள குறைபாடுகளைக் கண்டறிந்து அவற்றைத் தீர்ப்பதற்கான விதந்துரைப்புக்களை முன்மொழிவதாகும். இக்கோட்டத்தின் பட்டிருப்பு வலயத்திலுள்ள 37 பாடசாலைகளிலிருந்து வசதி மாதிரி எடுப்பின் மூலம் பத்துப் பாடசாலைகள் தெரிவு செய்யப்பட்டன. இவற்றில் 1AB பாடசாலை ஒன்றும் 1C பாடசாலைகள் ஐந்தும் வகை-2 பாடசாலைகள் நான்கும் உள்ளடங்குகின்றன. நோக்க மாதிரியின் அடிப்படையில் பத்து அதிபர்களும் படையாக்க மாதிரி முறையின் அடிப்படையில் 5:1 எனும் விகிதத்தில் 51 ஆசிரியர்களும் 3:1 எனும் விகிதத்தில் 103 மெல்லக் கற்கும் மாணவர்களும் இம் மாணவர்களை அடிப்படையாகக்கொண்டு 2:1 எனும் விகிதத்தில் 52 பெற்றோர்களும் மாதிரிகளாகத் தெரிவு செய்யப்பட்டு அவர்களிடம் வினாக்கொத்து, நேர்காணல், அவதானம், ஆவணம் போன்ற ஆய்வுக் கருவிகள் பயன்படுத்தப்பட்டன. இவற்றின் மூலம் தரவுகள், தகவல்கள் பெறப்பட்டு அவை பண்பு ரீதியாக மற்றும் அளவு ரீதியாக Microsoft Excel படி முறைகளினூடாக பகுப்பாய்வு செய்யப்பட்டு, வியாக்கியானமும் கலந்துரையாடலும் இடம்பெறுகின்றது. தரவுப்பகுப்பாய்வு முறை மூலம் பெறப்பட்ட ஆய்வு முடிவுகளாக பெற்றோரின் கவனயீனம், ஒத்துழையாமை, வேலைக்கு அமர்த்துதல், தண்டனை வழங்குதல் போன்ற பல்வேறு பிரச்சினைகள் இனங்காணப்பட்டன. அதன்படி மெல்லக் கற்கும் மாணவர்களின் பெற்றோர்கள் பிள்ளைகளது கற்றலில் அர்ப்பணிப்பின்றி செயற்படும் நிலை அதிகமாக இடம்பெறுவது கண்டறியப்பட்டுள்ளது. இதனடிப்படையில் பெற்றோரின் பங்களிப்பிலுள்ள குறைபாடுகளை குறைக்கும் நோக்கில் விதந்துரைப்புக்களும் இவ்வாய்வினூடாக முன்வைக்கப்பட்டுள்ளன.

Abstract: *Literary works, defined as moral literature through poetry, flourished during the Kalaprara period. These writings often embraced Jain and Buddhist ideologies, prominently featuring the theory of impermanence. Within these texts, there is a distinct condemnation of sexual activities, portraying the feeling of love, known as Kama, as an instrument of evil. In contrast to Sangam literature, which revered Kama as a deity (Kaman), this literature deemed it as Kama and rejected it outright. There is a notable aversion even to natural sexual activities. Unlike Sangam literature, which extensively explored the myth*

*of 'Kaman,' the literature of this period has dealt with it sparingly, particularly in the context of moral teachings.*

திறவுச் சொற்கள் (*Keywords*) :- மெல்லக் கற்கும் மாணவர்கள், கற்றல் மேம்பாடு, பெற்றோர் பங்களிப்பு, *slow learners, learning development, parental involvement*

## 1.0 அறிமுகம்

### 1.1 ஆய்வின் அறிமுகம்

அனைவருக்கும் கல்வி என்ற சிந்தனை தற்காலத்தில் பிரபல்யமாக பேசப்படுகின்ற ஒன்றாகும். இதனடிப்படையில் கல்வியானது அனைவருக்கும் கிடைக்கப் பெற வேண்டியது அவசியமாகும். இதனைக் கருத்தில் கொண்டே இன்று அதிகமான பாடசாலைகளில் விசேட தேவைகள் சார் மாணவர்கள், சாதாரண மாணவர்களுடன் இணைந்து வகுப்பறைக் கற்றல் செயற்பாடுகளில் ஈடுபடுகின்றார்கள்.

இந்நிலையில் தற்போதைய பட்டிருப்பு வலய, மண்முனை தென் எருவில் பற்றுக் கோட்டப் பாடசாலைகளில் கனிஷ்ட இடைநிலைப் பிரிவில் கல்வி கற்கும் மெல்லக்கற்கும் மாணவர்களுக்கு தங்களது பெற்றோர்களின் கல்விசார் உறுதுணை போதாத நிலையில் உள்ளது. இதனால் கனிஷ்ட இடைநிலை வகுப்புகளில் மெல்லக் கற்கும் மாணவர்களிடையே பொதிந்துள்ள ஆற்றல்கள், திறன்கள், உணர்வுகள், அவர்களின் நடத்தைகள் மற்றும் கற்றல் மேம்பாடுகள் அசமந்த நிலையில் காணப்படுகின்றன. வகுப்பறைக் கற்றல், கற்பித்தல் செயற்பாடுகளில் சாதாரண பிள்ளைகளுடன் மெல்லக் கற்கும் பிள்ளைகளையும் இணைத்துக் கற்பிக்கும் போது மெல்லக் கற்கும் மாணவர்கள் மீது கவனம் செலுத்துவது மிகவும் குறைவாகும். வீட்டில் பெற்றோரின் ஆதரவின்மையால் பொருத்தமான கற்றல் நடைமுறையின்றி மாணவர்கள் மெல்லக் கற்கும் நிலை தொடர்கின்றது.

கல்விச் செயற்பாடுகளில் பெற்றோரின் வகிபங்கு புதியதொரு விடயம் அல்ல. பிள்ளைகளின் உளவிருத்தி, உடல் விருத்தி, வாழ்க்கைப் பழக்க வழக்கங்கள், கலாசாரம் பற்றிய அடிப்படை விளக்கங்கள், மொழிவிருத்தி, கல்வி மூலம் பெறப்படும் தொழில்சார் அறிவு போன்றவற்றினை பிள்ளைக்கு வழங்குவதில் பெற்றோர் முக்கிய பங்கினை கொண்டு காணப்படுகின்றனர். அநேகமான பெற்றோர்கள் தமது பிள்ளைகளின் கற்றல் இயலாமைக்கு பாடசாலையினையே குறை கூறுகின்றனர் (Band, 2004).

குடும்பத்தின் வறுமை, பருமன், தொழில் இன்மை முதலியன மாணவர்களின் கல்வி நிலையில் தாக்கத்தினை ஏற்படுத்துகின்றன. குடும்பத்தின் வருமானம் திருப்திகரமாக இல்லையெனில் பிள்ளையின் தேவையினை நிறைவு செய்வது கடினமாகிறது. பெற்றோர் பிள்ளைகளுக்கு போதிய வழிகாட்டாமை, தேவைகள் பூர்த்தி செய்யாமையால் பிள்ளைகள் ஒழுக்கமற்ற நடத்தைகளுக்கும் உள்ளாகின்றனர் (Porden, 2001).

ஆகையால் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலினை மேம்படுத்துவதில் முக்கியத்துவம் கொண்டவர்களாக பெற்றோர் காணப்படுகின்றனர். அதன் அடிப்படையில் மெல்லக் கற்கும் மாணவர்களின்; கற்றலை உயர்த்துவதற்கும் அவர்களின் எதிர்காலத்தை செம்மைப்படுத்துவதனையும் நோக்காகக் கொண்டு இவ் ஆய்வுப்பிரச்சினைத் தலைப்பு தெரிவு செய்யப்பட்டுள்ளது. அதன்படி ஆய்வினை முறையாக முன்னெடுப்பதன் மூலம் மெல்லக் கற்கும் மாணவர்களது கற்றலுக்கு பொருத்தமான தீர்வுகள் கிடைக்கும் என்கின்ற அடிப்படையிலும் எதிர்காலத்தில் மெல்லக் கற்கும் மாணவர்களுக்கு, பெற்றோர்களின் பங்களிப்பினை நேர்த்தியாக பெற்றுக்கொடுக்க முடியும் என்பதும் ஆய்வாளனது நம்பிக்கையாகும்

### 1.2 ஆய்வுப்பிரச்சினை

மெல்லக் கற்கும் பிள்ளைகளின் பெற்றோர் தமது பிள்ளைகள் மீது வெறுப்புணர்வுடன் நடந்து கொள்ளுதல், குறைபாடுகளை மாத்திரம் சுட்டிக்காட்டுதல், மெல்லக்கற்கும் பிள்ளையென முத்திரை

பதித்தல், ஏனைய பிள்ளைகளுடன் ஒப்பிட்டு இழிவுபடுத்துதல், சிறு பிழைகளுக்கு தண்டித்தல், திட்டுதல், அன்பு செலுத்தாது புறக்கணித்தல், கௌரவக் குறைவாக எண்ணுதல், போன்றவற்றை வெளிப்படுத்துகின்றனர். பெற்றோராது இத்தகைய செயற்பாடுகளால் பிள்ளைகள் தாழ்வு மனப்பாங்கை அடைவதுடன் உளவியல் தாக்கத்திற்கும் உள்ளாகின்றனர் (Holden,2002). பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் இடையே சிறந்த அணுகுமுறை இன்மையால் ஆளுமைப் பின்னடைவு, மனவெழுச்சிப் பின்னடைவு, கற்றல் செயற்பாடுகளில் பின்னடைவு போன்றவற்றை பிள்ளைகள் எதிர்நோக்குகின்றமை முக்கிய பிரச்சினையாக காணப்படுகிறது. பிள்ளைகளை உறவினர்களிடம் ஒப்படைத்து விட்டு தாய், தந்தையர் வெளிநாட்டிற்கு செல்வதும் உள்நாட்டினுள் வேலைக்குச் செல்வதும் அதிகரித்துள்ளது. பெற்றோர்கள் உழைப்புக்கு முக்கியத்துவம் கொடுத்து தமது பிள்ளைகளின் எதிர்காலம் பற்றி சிந்திக்காது செயற்படுகின்றனர். பெற்றோரின் அரவணைப்பும் பாதுகாப்பும் இன்றி பிள்ளைகள் பிறரை நம்பி வாழும் நிலை காணப்படுகின்றது. உறவினர்களால் வீட்டு வேலைக்கு அமர்த்துதல், பாலியல் சீண்டல்கள், தண்டனை வழங்குதல், அடிமையாக்குதல், சிறைப்படுத்துதல் அவமானப்படுத்துதல், உளவியல் ரீதியாக தாக்குதல் போன்றவற்றுக்கு பிள்ளைகள் பலியாகின்றனர் ( Nelsen, 2008). ஆகையால் பிள்ளைகளது வாழ்க்கை பாதுகாப்பின்றி சிதறடிக்கப்படவும் கற்றலில் பின்னடைவை எதிர்கொள்ளவும் பெற்றோர் காரணமாகின்றமை முக்கிய பிரச்சினையாகும்.

### 1.2.1 ஆய்வுப்பிரச்சினைக் கூற்று

மண்முனை தென் எருவில் பற்றுக் கோட்டப் பாடசாலைகளை அடிப்படையாகக் கொண்ட மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்துவதில் பெற்றோர் பங்களிப்பற்றவர்களாகக் காணப்படுகின்றமையால் மெல்லக் கற்கும் மாணவர்களது வினைத்திறனான கற்றல் செயற்பாடுகள் பாதிப்படைகின்றன.

### 1.3 ஆய்வின் நோக்கம் - பொது நோக்கம்

மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றல் செயற்பாட்டில் பெற்றோரின் பங்களிப்பிலுள்ள குறைபாடுகளை கண்டறிந்து, அவற்றை நிவர்த்தி செய்வதற்கான வழிமுறைகளையும் ஆலோசனைகளையும் முன்வைத்தல்.

### 1.2.1 ஆய்வுப்பிரச்சினைக் கூற்று

மண்முனை தென் எருவில் பற்றுக் கோட்டப் பாடசாலைகளை அடிப்படையாகக் கொண்ட வகுப்புக்களில் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்துவதில் பெற்றோர் பங்களிப்பற்றவர்களாகக் காணப்படுகின்றமையால் மெல்லக் கற்கும் மாணவர்களது வினைத்திறனான கற்றல் செயற்பாடுகள் பாதிப்படைகின்றன.

### 1.3 ஆய்வின் நோக்கம் - பொது நோக்கம்

வகுப்புகளில் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றல் செயற்பாட்டில் பெற்றோரின் பங்களிப்பிலுள்ள குறைபாடுகளை கண்டறிந்து, அவற்றை நிவர்த்தி செய்வதற்கான வழிமுறைகளையும் ஆலோசனைகளையும் முன்வைத்தல்.

### 1.3.1 சிறப்பு நோக்கங்கள்

1. இடைநிலை வகுப்புக்களிலுள்ள மெல்லக் கற்கும் மாணவர்களின் தற்போதய நிலையினை இனங்காணல்.
2. இடைநிலை வகுப்புக்களிலுள்ள மெல்லக் கற்கும் மாணவர்கள்இ மெல்லக் கற்பதற்கான காரணங்களை கண்டறிதல்.
3. இடைநிலை வகுப்புக்களிலுள்ள மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றல் செயற்பாடுகளில் பெற்றோரின் பங்களிப்பிலுள்ள குறைபாடுகளை பகுப்பாய்வு செய்தல்.
4. இடைநிலை வகுப்புக்களில் உள்ள மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்தும் வகையில் பெற்றோருக்கான ஆலோசனைகளையும் வழிமுறைகளையும் முன்வைத்தல்.

### 2.0 இலக்கிய மீளாய்வு

ஒரு வகுப்பறையில் சாதாரண குழந்தைகளிடையே மெதுவாக கற்கும் பிள்ளைகள் அடையாளம் காண்பது கடினமான பணியாகும். ஏனெனில் குறைந்த நுண்ணறிவு உள்ள குழந்தைகளின் கல்வியை விட பிற நடவடிக்கைகளில் சிறப்பாக செயல்படுகின்றனர். மெதுவாக கற்பவர்கள் மாதிரியினை தெரிவு செய்வதற்கு ஆராய்ச்சியாளர்கள் சோதனை கவனிப்பு முறை, சாதனை அளவீடு, ஆளுமை பட்டியல் முறையினை பயன்படுத்துகின்றனர் (Korojana,2008).

பணக்கார பெற்றோரும் ஏழைப் பெற்றோரும் காலையில் வேலைக்கு சென்று விட்டு இரவு வெகு நேரம் தங்கள் குழந்தைகளுடன் நேரம் செலவிட முடியாதிருக்கின்றனர். இத்தகைய பெற்றோருக்கு பிள்ளைகளை கண்காணிக்க நேரமில்லை. பிள்ளைகளின் கற்றல் செயல்முறையில் தடைகளை விளைவிக்கும் காரணியாக இத்தகைய பெற்றோர் அமைகின்றனர் (Appaji, 2020).

பிள்ளைக்குத் தேவையான கற்றல் உபகரணங்களை வாங்கி கொடுக்காமை, கவனமின்மை, கல்வியின் முக்கியத்துவத்தை உணராமை, பிள்ளையின் செயற்பாடு பற்றிய கவனம் செலுத்தாமை, பிரிந்து வாழுதல், விவாகரத்து பெறுதல், மதுபாவனை, வெளிநாடு செல்லுதல், வேலைப்பளு முதலிய காரணிகள் பிள்ளைகள் கல்வி அபிவிருத்திக்கு தடையாக அமைகின்றன. பெற்றோரின் பங்களிப்பால் பிள்ளையின் கற்றலில் நேர்மறையான விளைவுகளை ஏற்படுத்த முடியும் (Sandler, 1997).

பிள்ளைகளுக்கு மதிப்பளித்து அவர்களின் விருப்பு,வெறுப்புகளை விளங்கிக்கொண்டு மாணவர்களின் எதிர்பார்ப்புக்கு ஏற்ப முடிவுகளை பெற்றோர் எடுக்கவேண்டும். கற்றலை அதிகரித்தல், ஊக்குவித்தல், வழிகாட்டல்களையும் பெற்றோர் மேற்கொள்ள வேண்டும் (Borby,2015).

### 3.0 ஆய்வு முறையியல்

ஆய்வு முறையியல் சிறப்பாக அமையும் பட்சத்தில் தீர்வுகள் நம்பகத்தன்மையாக அமையும். இவ்வாய்வில் எண், அளவு ரீதியான முறையியல்களும் பண்பு ரீதியான முறையியல்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. எண்ரீதியான முறையியல்களுள் எண்கள், அட்டவணைகள், மாணவர் தொகை என்பன உள்ளடங்கப்பட்டுள்ளன. இதன் மூலமாக புறவயத்தன்மையாக ஆய்வு கொண்டு செல்லப்படுகின்றது.

ஆய்வு தொடர்பான கோட்பாட்டு ரீதியான உறுதிப்படுத்தல்களுடன் தொடர்பு கொண்டதாக பண்பு ரீதியான முறையியல் காணப்படுகின்றது. இத்துடன் சம்பத்தப்பட்ட பாடசாலை ஆசிரியர்கள், மெல்லக் கற்கும் மாணவர்களிடத்தில் வினாக்கொத்து மூலமாகவும் கற்றல், கற்பித்தல் செயற்பாடுகள் நேரடி அவதானம் மூலமாகவும் பெற்றோர்கள், அதிபர்களிடம் நேர்காணல் மூலமாகவும் பெறப்பட்ட தகவல்கள், அபிப்பிராயங்கள், எண்ணங்கள், வெளிப்பாடுகள் போன்ற அகவயமான உணர்வுகளும் ஆய்வில் கவனத்திற்கொள்ளப்பட்டன. இதன்படி அளவு ரீதியான, பண்பு ரீதியான விடயங்கள் கருத்திற்கொள்ளப்பட்டு இவ்வாய்வு அமைவதால் இவ்வாய்வில் கலப்பு ஆய்வு பயன்படுத்தப்பட்டுள்ளது. அத்தோடு வினாக்கொத்து, நேர்காணல், அவதானம் மூலம் பெறப்பட்ட தகவல்களை அளவு ரீதியாகவும் பண்பு ரீதியாகவும் பகுப்பாய்வு செய்து அதன் மூலமாக முடிவுகளை கண்டறிவதாக இவ்வாய்வானது அமைவதால் இது ஒரு அளவை நிலை ஆய்வாக காணப்படுகின்றது.

### 3.1 மாதிரித் தெரிவு

“மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்துவதில் பெற்றோரின் பங்களிப்பு.” எனும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வை மேற்கொள்வதற்கு ஆய்வாளரினால் நோக்க மாதிரி, படையாக்க மாதிரி, வசதி மாதிரி எடுப்பு முறைகள் பிரயோகிக்கப்பட்டுள்ளன. அதன்படி இவ்வாய்வின் பிரதேசமாக தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டிருப்பு வலய, மண்முனை தென் எருவில் பற்று கோட்டத்தில் 37 பாடசாலைகள் காணப்படுகின்றன. எனினும் பாடசாலைக்கு இடையேயான தூரம், அதிக குடித்தொகை, செலவு முதலிய வசதிகளை கருத்தில் கொண்டு 37 பாடசாலைகளில் ஆய்வாளரின் வசதிக்கு ஏற்ப, வசதி மாதிரி முறை மூலம் 10 தமிழ் கலவன் பாடசாலைகள் தெரிவு செய்யப்பட்டன.

இடைநிலைப் பிரிவில் 1605 மாணவர்கள் காணப்படுகிறார்கள். இவர்களில் 311 மெல்லக்கற்கும் மாணவர்களிலிருந்து படையாக்க மாதிரி முறையின் அடிப்படையில் 3:1 விகிதத்தில் 103 மெல்லக் கற்கும் மாணவர்கள் தெரிவு செய்யப்பட்டனர். இம் மெல்லக் கற்கும் மாணவர்களை அடிப்படையாகக்கொண்டு இலகு எழுமாறாக 2:1 எனும் விகிதத்தில் 52 பெற்றோரும் தெரிவு

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

செய்யப்பட்டனர். அத்துடன் 271 மொத்த ஆசிரியர்களிலிருந்து 5:1 எனும் விகிதத்தில் 51 ஆசிரியர்கள் தெரிவு செய்யப்பட்டனர். ஆய்வின் நோக்கம் கருதி 10 பாடசாலைகளின் அதிபர்களிடம் தகவல் பெற்றுக்கொள்ளும் வகையில், நோக்க மாதிரியில் 10 பாடசாலைகளின் அதிபர்கள் 10 பேரும்; தெரிவு செய்யப்பட்டுள்ளனர். இவ்வாறு மொத்தமாக 216 பேர் மாதிரிகளாக தெரிவு செய்யப்பட்டனர்.

### 4.0 தரவுப்பகுப்பாய்வு

### 4.1 கற்றலில் மெல்லக் கற்கும் மாணவர்களின் கவனம்

பாடசாலையில் வகுப்பறை கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளின் போது மெல்லக்கற்கும் மாணவர்களின் கவனம் தொடர்பாக ஆசிரியர்களிடம் வினவப்பட்டபோது மிக நன்று, நன்று பதிலை எவரும் முன்வைக்கவில்லை. சாதாரணம் பதிலை 28 ஆசிரியர்கள் கூறினர். இது 55 சதவீதமாகக் காணப்படுகின்றது. குறைவு என்ற பதிலை 17 ஆசிரியர்கள் கூறினர். இது 33 சதவீதமாகக் காணப்படுகின்றது. மிகக் குறைவு பதிலை 6 ஆசிரியர்கள் கூறினர். இது 12 சதவீதமாகக் காணப்படுகின்றது. இதனை பினவரும் உரு 4.1 காட்டுகின்றது.




**உரு 4.1 கற்பித்தலில் மாணவர்களின் கவனம்**

### 4.2 கற்றல் கற்பித்தலில் உடலியல் குறைபாடுகள் ஏற்படுத்தும் தாக்கம்

அங்கவீனம், குறைபாடுகள் கற்றல் கற்பித்தலில் ஏற்படுத்துகின்ற தாக்கம் தொடர்பாக மாணவர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்களிடம் ஆய்வுக் கருவிகள் மூலம் தரவுகள் பெறப்பட்டன. அந்தவகையில் அங்கவீனம் அல்லது குறைபாடுகள் இருப்பதால் உங்களது கற்றல் செயற்பாடுகளில் தாக்கம் ஏற்படுகின்றதா? என மாணவர்களிடம் வினவப்பட்டபோது ஆம் என 17 மாணவர்கள் கூறினர். இது 77 சதவீதமாகும். ஓரளவு என 5 மாணவர்கள் கூறினர். இது 23 சதவீதமாகும். இல்லை என எவரும் முன்வைக்கவில்லை.

இதேபோன்று ஆசிரியர்களிடம் வினவியபோது ஆம் என 8 ஆசிரியர்கள் கூறினர். இது 72 சதவீதமாகும். ஓரளவு என 3 ஆசிரியர்கள் கூறினர். இது 27 சதவீதமாகும். இல்லை என எவரும் கூறவில்லை. இதேபோன்று பெற்றோர்களிடம் வினவப்பட்டபோது ஆம் என 11 பெற்றோர்கள் கூறினர். இது 73 சதவீதமாகும். ஓரளவு என 4 பெற்றோர்கள் கூறினர். இது 27 சதவீதமாகும். இல்லை என எவரும் குறிப்பிடவில்லை.

அத்துடன் ஆய்வாளரினால் நேரடி அவதானம் மூலம் விசேட நோய் கொண்ட மெல்லக்கற்கும் மாணவர்கள் கற்கும் வகுப்பறைகளில் கற்றல், கற்பித்தல் செயற்பாடுகள் அவதானிக்கப்பட்டன. இதன்போது 80 சதவீதமான பிள்ளைகள் சிரமத்தினை எதிர்கொள்கின்றார்கள் என்பதனையும் 20 சதவீதமான பிள்ளைகள் ஓரளவு சிரமத்தினை எதிர்கொள்கின்றார்கள் என்பதனையும் அவதானிக்க முடிந்தது. இவற்றை பின்வருமாறு காட்டலாம்.




உரு 4.2 மெல்லக் கற்கும் மாணவர்களின் உடலியல் குறைபாடு

### 4.3 பிள்ளைகளுக்கு தண்டனை வழங்குதல்

கற்கும் போது குறைபாடுகளை வெளிப்படுத்தினால் பெற்றோர் தண்டனை வழங்குகின்றரா? என ஆசிரியர்கள், மாணவர்கள்,பெற்றோர்களிடம் வினவியபோது 103 மாணவர்களில் ஆம் என 45 மாணவர்கள் கூறினர். இது 44 சதவீதமாகும். 34 மாணவர்கள் இல்லை எனக்கூறினர். இது 33 சதவீதமாகும். 24 மாணவர்கள் ஓரளவு எனக்கூறினர். இது 23 சதவீதமாகும். அவ்வாறே 51 ஆசிரியர்களிடம் வினவியபோது 31 ஆசிரியர்கள் ஆம் எனக்கூறினர். இது 61 சதவீதமாகும். 18 ஆசிரியர்கள் இல்லை எனக்கூறினர். இது 35 சதவீதமாகும். 2 ஆசிரியர்கள் ஓரளவு எனக்கூறினர். இது 4 சதவீதமாகும். அவ்வாறே 52 பெற்றோர்களிடம் வினவியபோது 14 பெற்றோர்கள் ஆம் எனக்கூறினர். இது 27 சதவீதமாகும். 20 பெற்றோர்கள் இல்லை எனக்கூறினர். இது 38 சதவீதமாகும். 18 பெற்றோர்கள் ஓரளவு எனக்கூறினர். இது 35 சதவீதமாகும்.

இத்தரவுகளின் அடிப்படையில் பார்க்கும்போது ஆய்வுக்குட்படுத்திய பிரதேசங்களில் குறைபாடுகளை வெளிக்காட்டும் போது பெற்றோர்கள்இ மெல்லக்கற்கும் பிள்ளைகளுக்கு தண்டனை வழங்குகின்றனர் என்பதனை அறியலாம். இதனை பின்வரும் உரு 4.3 காட்டுகின்றது.




உரு 4.3 மெல்லக்கற்கும் மாணவர்களுக்கு பெற்றோர் தண்டனை வழங்குதல்

### 4.4 பரிகாரக் கற்பித்தல் வழங்குதல்

கற்றல், கற்பித்தலில் பரிகாரக் கற்பித்தலானது பிரதானமாகும். சதாரண மாணவர்களை விட விசேட தேவைகள்சார் பிள்ளைகளது கற்றலுக்கு பரிகாரக் கற்பித்தல் செல்வாக்குச் செலுத்துகின்றது. பரிகாரக் கற்பித்தல் மூலம் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றல் விருத்தியடையும். அந்தவகையில் கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளின் போது பரிகாரக் கற்பித்தலை மேற்கொள்ள வேண்டும் என்பதனை ஏற்றுக் கொள்கின்றீரா? என மாணவர்கள், ஆசிரியர்கள், அதிபர்கள்,பெற்றோர்களிடம் வினவப்பட்டது.

அந்தவகையில் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளின் போது பரிகாரக் கற்பித்தலை மேற்கொள்ள வேண்டும் என்பதனை ஏற்றுக் கொள்கின்றீரா? என மாதிரிகளாகத்

தெரிவு செய்யப்பட்ட 52 மொத்த பெற்றோர்களிடம் வினவியபோது 48 பெற்றோர்கள் பூரணமாக ஏற்றுக்கொள்கின்றேன் எனக்கூறினர். இது 92 சதவீதமாகக் காணப்படுகின்றது. 4 பெற்றோர்கள் ஏற்றுக்கொள்கின்றேன் எனக்கூறினர். இது 8 சதவீதமாகக் காணப்படுகின்றது. பூரணமாக ஏற்றுக்கொள்ளவில்லை என எவரும் குறிப்பிடவில்லை. அவ்வாறே மாதிரிகளாகத் தெரிவு செய்யப்பட்ட 103 மாணவர்களிடம் வினவியபோது 80 மாணவர்கள் பூரணமாக ஏற்றுக்கொள்கின்றேன் எனக் கூறினர். இது 78 சதவீதமாகக் காணப்படுகின்றது. ஏற்றுக்கொள்கின்றேன் என 23 மாணவர்கள் கூறினர். இது 22 சதவீதமாகும். பூரணமாக ஏற்கவில்லை என எவரும் குறிப்பிடவில்லை.

அவ்வாறே மாதிரிகளாகத் தெரிவு செய்யப்பட்ட 51 ஆசிரியர்களிடம் வினவியபோது 45 ஆசிரியர்கள் பூரணமாக ஏற்றுக்கொள்கின்றேன் எனக்கூறினர். இது 88 சதவீதமாகக் காணப்படுகின்றது. ஏற்றுக்கொள்கின்றேன் என 6 மாணவர்கள் கூறினர். இது 12 சதவீதமாகும். பூரணமாக ஏற்கவில்லை என எவரும் குறிப்பிடவில்லை. இதேபோன்று மாதிரிகளாகத் தெரிவு செய்யப்பட்ட 10 அதிபர்களிடம் வினவியபோது 10 அதிபர்களும் பூரணமாக ஏற்றுக்கொள்கின்றேன் எனக்கூறினர். இது 100 சதவீதமாகக் காணப்படுகின்றது. அதன்படி மெல்லக் கற்கும் மாணவர்களுக்கான பரிகாரக் கற்பித்தலை அதிகமானோர் பூரணமாக ஏற்றுக்கொண்டுள்ளனர். இவற்றை பின்வரும் உரு 4.4 காட்டுகின்றது




உரு 4.4 மெல்லக் கற்கும் மாணவர்களுக்கான பரிகாரக் கற்பித்தலை வழங்குதல்

## 5.0 முடிவுகளும் விதந்துரைப்புக்களும்

### 5.1 இடைநிலை வகுப்புக்களில் உள்ள மெல்லக்கற்கும் மாணவர்களின் தற்போதைய நிலையினை இனங்காணல்

**முடிவுகள்**

1. மெல்லக் கற்கும் மாணவர்கள் பாடசாலை மட்டத்திலும் வீட்டிலும் கற்பதில் அசமந்தப் போக்கினை வெளிக்காட்டுவதுடன் கற்பதற்கு குறைவான விருப்பத்தினைக் கொண்டுள்ளமையினை 57%ஆன மாணவர்களும் 62%ஆன பெற்றோர்களும் 50% ஆன அதிபர்களும் 48% சதவீதமான ஆசிரியர்களும் வெளிப்படுத்திய பதில்களின் மூலமாக அறிய முடிகின்றது.
2. கணிதம், விஞ்ஞானம், ஆங்கிலம், தமிழ், வரலாறு போன்ற பாடங்களை கற்பதில் மெல்லக் கற்கும் மாணவர்கள் சிரமத்தினை எதிர் கொள்கின்றனர் என்பதனை 71% ஆன மாணவர்களும் 76% ஆன ஆசிரியர்களும் 79% ஆன பெற்றோர்களும் 80% ஆன அதிபர்களும் கூறிய கருத்துக்களின் மூலமாக அறிய முடிகின்றது.
3. மெல்லக் கற்கும் மாணவர்கள் மொழித்திறனில் பின்னடைவான மாணவர்களாக காணப்படுகின்றமையை 44% ஆன பெற்றோர்களின் கருத்துக்கள் உறுதி செய்கின்றன.
4. மெல்லக் கற்கும் மாணவர்கள் பாட விடயம் சார்ந்த செயற்பாடுகளை விட இணைப்பாடவிதான செயற்பாடுகளில் அதிக நாட்டத்தை வெளிக்காட்டுகின்றமையை 65%

ஆன மாணவர்களும் 71% ஆன பெற்றோர்களும் 65% ஆசிரியர்களும் 60% ஆன அதிபர்களும் வழங்கிய தகவல்கள் மூலம் அறிய முடிகின்றது.

**விதந்துரைப்புக்கள்**

1. மெல்லக் கற்கும் பிள்ளைகள் கற்பதற்கு விருப்புக் கொள்ளும் வகையில் பொருத்தமானவாறு வீட்டுச் சூழலை உருவாக்கி, கற்கும் இடத்தினை ஈர்க்குமாறு தயார் செய்து கற்றலுக்குத் தேவையான வளங்களை வழங்குதல் வேண்டும்.
2. பிரதான பாடங்களான கணிதம், விஞ்ஞானம், ஆங்கிலம், தமிழ், வரலாறு முதலிய பாடங்கள் ஒவ்வொன்றையும் முயற்சியுடன் பிள்ளைகள் கற்பதற்கு ஊக்குவிக்கப்படல் வேண்டும்.
3. கணிதம், ஆங்கிலம் முதலிய கடின பாடங்களை விளையாட்டுக்கு ஊடாக பிள்ளைகளுக்கு வழங்குவதற்கு பெற்றோர் தம்மைத் தயார்படுத்திக் கொள்ளல் அவசியமாகும்.
4. பயிற்சி வகுப்புகளுக்கு பிள்ளைகளை அனுப்புவதுடன் பிள்ளைகளை மேற்பார்வை செய்து வழிப்படுத்தல் வேண்டும்.
5. மாணவர்களின் எழுதுதல், வாசித்தலில் பாட ஆசிரியர்களும் பெற்றோர்களும் கரிசனை காட்டுவது அவசியமாகும்.
6. மொழித்திறன் பின்னடைவான பிள்ளைகளுக்கு பரிகாரக் கற்பித்தல் முறையினை தொடர்ச்சியாக மேற்கொள்ள வேண்டும்.
7. எழுதுதல் பின்னடைவான பிள்ளைகளுக்கு வீட்டில் மணல் பரப்பிய தட்டுக்கள் மூலமாக எழுத்து பயிற்சியினை பெற்றோர் வழங்கவேண்டும். களி முதலிய பொருட்களில் விளையாட செய்வதனால் பிள்ளைகளின் விரல்கள் எழுத்துக்களை எழுதுவதற்கு இயைபாக்கம் பெறும். அத்துடன் பிள்ளைகள் எழுதுவதற்கு இலகுவான கைபிடிகொண்ட பென்சில்கள், பேனைகளை வழங்குவதனாலும் பிள்ளைகளின் எழுத்துத் திறனை வளர்க்க முடியும். இவற்றை பெற்றோர் கவனத்தில் கொள்வது அவசியமாகும்.
8. பரீட்சைக்கு மாத்திரம் தயார்படுத்தும் வகையில் பிள்ளைகளுக்கு திணிப்புக்கல்வியினை வழங்காது இணைப்பாடவிதான செயற்பாடுகளில் இணைந்து செயற்படுவதற்கு ஊக்குவித்தல் வேண்டும்.
    - இணைப்பாடவிதான செயற்பாடுகள் பிள்ளைகளின் கற்றலை பாதிக்கும் என தவறாக எண்ணும் மனநிலையை பெற்றோர் கைவிட வேண்டும்.
    - பிள்ளைகளின் திறனை கண்டறிந்து திறனை வளர்ப்பதற்கான பயிற்சிகளை வழங்குதல் அவசியமாகும்.

**5.2 இடைநிலை வகுப்புக்களில் உள்ள மெல்லக்கற்கும் மாணவர்கள் மெல்லக்கற்பதற்கான காரணிகளை கண்டறிதல்**

**முடிவுகள்**

1. மெல்லக்கற்கும் மாணவர்கள் 21% ஆனவர்கள் விசேட நோய்களால் பாதிக்கப்பட்டுள்ளார்கள் என்பதனை 29%ஆன பெற்றோர்களும் 22% ஆசிரியர்களும் வெளிப்படுத்திய தகவல்கள் உறுதி செய்கின்றது.
2. வீட்டுச் சூழலில் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலுக்கான உதவிகள் கிடைப்பதில்லை என 45% ஆன மாணவர்களும் 55% ஆன ஆசிரியர்களும் 58% பெற்றோர்களும் கூறிய கருத்துக்கள் உறுதி செய்கின்றன.
3. மெல்லக் கற்கும் மாணவர்கள் பாடசாலைக்கு சீராக வருகை தருவதில்லை என்பதனை 63% ஆன ஆசிரியர்கள் கூறிய பதில்கள் மூலமாக அறியலாம்.
4. இடர்காலச் சூழலின் போது மெல்லக் கற்கும் மாணவர்கள் கற்பதற்கு தாய், தந்தையருக்கு போதிய கல்வி அறிவும் தொழிநுட்ப அறிவும் இன்றிக் காணப்படுகின்றது என்பதனை 36% ஆன மாணவர்களும் 39% ஆன ஆசிரியர்களும் 35% ஆன பெற்றோர்களும் கூறிய தகவல்கள் உறுதி செய்கின்றது.

**விதந்துரைப்புக்கள்**

1. விசேட தேவையுடைய பிள்ளைகளை கற்றலில் இருந்து ஒதுக்காது உள்ளடங்கல் கல்வி மூலம் அனைவரையும் ஒன்றிணைத்து கற்றல் கற்பித்தலை வழங்க வேண்டும்.
2. வீட்டில் எவ்வகையான கஷ்டம் ஏற்படினும் தாய்மார் பிள்ளைகளை தனித்து விட்டு வெளிநாடு செல்வதை தவிர்க்க வேண்டும்.
3. மெல்லக் கற்கும் பிள்ளைகளின் குடும்பப் பின்னணி, வறுமையுடையதாக காணப்படினும் வறுமை மற்றும் இல்லாமையை பிள்ளைகள் மீது சுமத்துவதனை தவிர்க்க வேண்டும்.
4. கிராமப்புறத்தில் வாழ்கின்ற மக்கள் மின்சார வசதி, நவீன தொழில்நுட்ப வசதி, திறன்பேசி வசதியின்றிக் காணப்படும் போதிலும் தமது பிள்ளைகளின் நலனை கருத்தில் கொண்டு அருகில் உள்ள பிள்ளைகளுடன் இணைந்து கற்றலை வழங்குவதற்கு ஏற்பாடுகளை செய்தல் வேண்டும்.

**விதந்துரைப்புக்கள்**

1. மெல்லக் கற்கும் பிள்ளைகள் கற்பதற்கு விருப்புக் கொள்ளும் வகையில் பொருத்தமானவாறு வீட்டுச் சூழலை உருவாக்கி, கற்கும் இடத்தினை ஈர்க்குமாறு தயார் செய்து கற்றலுக்குத் தேவையான வளங்களை வழங்குதல் வேண்டும்.
2. பிரதான பாடங்களான கணிதம், விஞ்ஞானம், ஆங்கிலம், தமிழ், வரலாறு முதலிய பாடங்கள் ஒவ்வொன்றையும் முயற்சியுடன் பிள்ளைகள் கற்பதற்கு ஊக்குவிக்கப்படல் வேண்டும்.
   - கணிதம், ஆங்கிலம் முதலிய கடின பாடங்களை விளையாட்டுக்கு ஊடாக பிள்ளைகளுக்கு வழங்குவதற்கு பெற்றோர் தம்மைத் தயார்படுத்திக் கொள்ளல் அவசியமாகும்.
   - பயிற்சி வகுப்புகளுக்கு பிள்ளைகளை அனுப்புவதுடன் பிள்ளைகளை மேற்பார்வை செய்து வழிப்படுத்தல் வேண்டும்.
3. மாணவர்களின் எழுதுதல்இ வாசித்தலில் பாட ஆசிரியர்களும் பெற்றோர்களும் கரிசனை காட்டுவது அவசியமாகும்.
   - மொழித்திறன் பின்னடைவான பிள்ளைகளுக்கு பரிகாரக் கற்பித்தல் முறையினை தொடர்ச்சியாக மேற்கொள்ள வேண்டும்.
   - எழுதுதல் பின்னடைவான பிள்ளைகளுக்கு வீட்டில் மணல் பரப்பிய தட்டுக்கள் மூலமாக எழுத்து பயிற்சியினை பெற்றோர் வழங்கவேண்டும். களி முதலிய பொருட்களில் விளையாட செய்வதனால் பிள்ளைகளின் விரல்கள் எழுத்துக்களை எழுதுவதற்கு இயைபாக்கம் பெறும். அத்துடன் பிள்ளைகள் எழுதுவதற்கு இலகுவான கைபிடிகொண்ட பென்சில்கள், பேனைகளை வழங்குவதனாலும் பிள்ளைகளின் எழுத்துத் திறனை வளர்க்க முடியும். இவற்றை பெற்றோர் கவனத்தில் கொள்வது அவசியமாகும்.
4. பரீட்சைக்கு மாத்திரம் தயார்படுத்தும் வகையில் பிள்ளைகளுக்கு திணிப்புக்கல்வியினை வழங்காது இணைப்பாடவிதான செயற்பாடுகளில் இணைந்து செயற்படுவதற்கு ஊக்குவித்தல் வேண்டும்.
   - இணைப்பாடவிதான செயற்பாடுகள் பிள்ளைகளின் கற்றலை பாதிக்கும் என தவறாக எண்ணும் மனநிலையை பெற்றோர் கைவிட வேண்டும்.
   - பிள்ளைகளின் திறனை கண்டறிந்து திறனை வளர்ப்பதற்கான பயிற்சிகளை வழங்குதல் அவசியமாகும்.

**5.2 இடைநிலை வகுப்புக்களில் உள்ள மெல்லக்கற்கும் மாணவர்கள் மெல்லக்கற்பதற்கான காரணிகளை கண்டறிதல்**

**முடிவுகள்**

1. மெல்லக்கற்கும் மாணவர்கள் 21% ஆனவர்கள் விசேட நோய்களால் பாதிக்கப்பட்டுள்ளார்கள் என்பதனை 29% ஆன பெற்றோர்களும் 22%ஆசிரியர்களும் வெளிப்படுத்திய தகவல்கள் உறுதி செய்கின்றது.

2. வீட்டுச் சூழலில், மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலுக்கான உதவிகள் கிடைப்பதில்லை என 45% ஆன மாணவர்களும் 55% ஆன ஆசிரியர்களும் 58% பெற்றோர்களும் கூறிய கருத்துக்கள் உறுதி செய்கின்றன.
3. மெல்லக் கற்கும் மாணவர்கள் பாடசாலைக்கு சீராக வருகை தருவதில்லை என்பதனை 63% ஆன ஆசிரியர்கள் கூறிய பதில்கள் மூலமாக அறியலாம்.
4. இடர்காலச் சூழலின் போது மெல்லக் கற்கும் மாணவர்கள் கற்பதற்கு தாய்இ தந்தையருக்கு போதிய கல்வி அறிவும் தொழிநுட்ப அறிவும் இன்றிக் காணப்படுகின்றது என்பதனை 36% ஆன மாணவர்களும் 39% ஆன ஆசிரியர்களும் 35% ஆன பெற்றோர்களும் கூறிய தகவல்கள் உறுதி செய்கின்றது.

**விதந்துரைப்புக்கள்**

1. விசேட தேவையுடைய பிள்ளைகளை கற்றலில் இருந்து ஒதுக்காது உள்ளடங்கல் கல்வி மூலம் அனைவரையும் ஒன்றிணைத்து கற்றல் கற்பித்தலை வழங்க வேண்டும்.
2. வீட்டில் எவ்வகையான கஷ்டம் ஏற்படினும் தாய்மார் பிள்ளைகளை தனித்து விட்டு வெளிநாடு செல்வதை தவிர்க்க வேண்டும்.
3. மெல்லக் கற்கும் பிள்ளைகளின் குடும்பப் பின்னணி, வறுமையுடையதாக காணப்படினும் வறுமை மற்றும் இல்லாமையை பிள்ளைகள் மீது சுமத்துவதனை தவிர்க்க வேண்டும்.
4. கிராமப்புறத்தில் வாழ்கின்ற மக்கள் மின்சார வசதி, நவீன தொழில்நுட்ப வசதி, திறன்பேசி வசதியின்றிக் காணப்படும் போதிலும் தமது பிள்ளைகளின் நலனை கருத்தில் கொண்டு அருகில் உள்ள பிள்ளைகளுடன் இணைந்து கற்றலை வழங்குவதற்கு ஏற்பாடுகளை செய்தல் வேண்டும்.

**5.3 இடைநிலை வகுப்புக்களில் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றல் செயற்பாடுகளில் பெற்றோரின் பங்களிப்பிலுள்ள குறைபாடுகளை பகுப்பாய்வு செய்தல்**

**முடிவுகள்**

1. பெற்றோர்கள் மெல்லக் கற்கும் மாணவர்களின் வெற்றிகளுக்கு பாராட்டுக்கள்இ பரிசில்கள் வழங்குவதில் நாட்டமின்றிக் காணப்படுகின்றமையை 46% ஆன மாணவர்களும் 60% ஆன ஆசிரியர்களும் 65% ஆன பெற்றோர்களும் வெளிப்படுத்திய கருத்துக்கள் உறுதி செய்கின்றன.
2. மெல்லக் கற்கும் மாணவர்களின் பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு ஓரளவு போசாக்குள்ள உணவுகளையே வழங்குகின்றனர் என்பதனை 49% மாணவர்களும் 74% ஆன ஆசிரியர்களும் 33% பெற்றோர்களும் கூறிய கருத்துக்கள் உறுதி செய்கின்றது.
3. மெல்லக்கற்கும் மாணவர்கள் கற்றல் குறைபாடுகளை வெளிக்காட்டும் போது அநேகமான பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு தண்டனைகளை வழங்குகின்றனர் என்பதனை 44% ஆன மாணவர்களும் 61% ஆன ஆசிரியர்களும் 27% ஆன பெற்றோர்களும் கூறிய கருத்துக்கள் மூலம் அறிய முடிகின்றது.
4. மெல்லக் கற்கும் மாணவர்களின் பெற்றோர்கள் பாடசாலையுடன் தொடர்புகளை பேணுவதில் ஆர்வமின்றிக் காணப்படுகின்றனமையினை 37% ஆன மாணவர்களும் 46% ஆன ஆசிரியர்களும் 35% பெற்றோர்களும் 50% அதிபர்களும் வழங்கிய கருத்துக்கள் மூலம் அறிய முடிகின்றது.

**விதந்துரைப்புக்கள்**

1. மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்த பாராட்டுக்கள், பரிசுகள் வழங்குவது அவசியமாகும்.
2. மெல்லக்கற்கும் பிள்ளைகளை பெற்றோர் கவனத்தில் கொள்ளாது விடாமல் பிள்ளைகளின் சிறுசிறு வெற்றிகளைக்கூட உடனுக்குடன் பாராட்டி ஊக்குவித்தல் அவசியமாகும்.
3. பொருளாதார பின்னடைவான குடும்பங்களாயின் பிள்ளைகளுக்கு பரிசில்கள் வழங்க முடியாத நிலையில் பாராட்டுக்களை வழங்கி கௌரவிக்கலாம். அத்துடன் பிள்ளைகள் வெற்றியினை கூறும்போது அலட்சியம் செய்வதனை பெற்றோர் தவிர்ப்பது சிறந்தது.

4. பிள்ளைகளின் ஆரோக்கியத்தில் பெற்றோர் அசமந்த நிலையினைக் காட்டாது கவனமெடுத்து பிள்ளைகளுக்கு போதுமான போசாக்கு உணவுகளை வழங்குதல் அவசியம் ஆகும்.

### 5.4 இடைநிலை வகுப்புக்களில் மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலை மேம்படுத்துவதில் பெற்றோர்களுக்கான ஆலோசனைகளையும் வழிமுறைகளையும் முன்வைத்தல்

**முடிவுகள்**

1. மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றலுக்கு தேவையான வளங்களை பெற்றோர் பெற்றுக் கொடுத்தல் அவசியமாகும் என்பதனை 60% ஆன மாணவர்களும் 88% ஆன ஆசிரியர்களும் 81% ஆன பெற்றோர்களும் 80% ஆன அதிபர்களும் வழங்கிய தகவல்கள் மூலமாக அறியமுடிகின்றது.
2. பெற்றோர், பிள்ளைகளிடமுள்ள குறைகளை மாத்திரம் சுட்டிக்காட்டாது நிறைகளையும் கூறுதல் வேண்டும் என்பதனை 66% ஆன மாணவர்களும் 79% ஆன பெற்றோர்களும் வெளிப்படுத்திய கருத்துக்கள் உறுதி செய்கின்றன.
3. மெல்லக் கற்கும் மாணவர்களின் கற்றல்இ கற்பித்தல் செயற்பாடுகளின் போது பரிகாரக் கற்பித்தல் முறையை மேற்கொள்ள வேண்டும் என்பதனை 92% ஆன பெற்றோர்களும் 78% ஆன மாணவர்களும் 88% ஆன ஆசிரியர்களும் கூறிய கருத்துக்கள் மூலமாக அறிய முடிகின்றது.
4. மெல்லக் கற்கும் பிள்ளைகள் பிரத்தியேக வகுப்புகளுக்கு செல்ல வேண்டும். பிரத்தியேக வகுப்புக்கள் பிள்ளைகளுக்கான தொடர்ச்சியான கற்றலுக்கு வழிவகுக்கும் என்பதனை 58% பெற்றோர்களும் 53% மாணவர்களும் வழங்கிய தகவல்கள் மூலம் அறிய முடிகின்றது.

**விதந்துரைப்புக்கள்**

1. சிறந்த கற்றல், கற்பித்தல் செயற்பாடுகளுக்கு வளங்களின் பிரயோகம் அவசியமாகின்றன. அந்த வகையில் மெல்ல கற்கும் மாணவர்கள் கற்றலினை மேற்கொள்வதற்கு பின்னிற்பவர்கள் மாணவர்களுக்குத் தேவையான வளங்கள் கிடைக்காதபோது கற்றலை கைவிடும் நிலை தோன்றிவிடும். ஆகையால் மெல்ல கற்கும் மாணவர்களுக்கு கற்றலுக்கு தேவையான வளங்களை பெற்றுக்கொடுப்பதற்கு பெற்றோர்கள் பூரண ஒத்துழைப்பினை வழங்க வேண்டும்.
2. பிள்ளைகளுக்கான கற்றல் உபகரணங்களை பெற முடியாத சந்தர்ப்பங்களில் உதவிபுரியும் நிறுவனங்கள், சமய ஸ்தாபனங்கள் மூலமாக உதவியினை பெற்று பிள்ளைகளுக்கான கற்றல் உபகரணங்களை பெற்றுக்கொடுக்க முடியும்.
3. பெற்றோர் தமது மெல்லக் கற்கும் பிள்ளைகளின் கற்றல் குறைபாடுகளை மாத்திரம் சுட்டிக்காட்டுதலை தவிர்க்கவேண்டும். பிள்ளைகளின் திறமைகளை அடையாளம் கண்டு நிறைகளையும் கூறுதல் மூலம் மெல்லக் கற்கும் பிள்ளைகள் தவறுகளை திருத்தம் செய்வதற்கு முயற்சிப்பார்கள்.
4. தேவைக்கு ஏற்பவும் சந்தர்ப்பத்திற்கு ஏற்பவும் பெற்றோர் அரவணைப்புஇ வழிகாட்டல், ஆதரவினை வழங்குதல் வேண்டும். அத்துடன் அதிக கோபம், வெறுப்புணர்வு முதலியவற்றை அதிகமாக பிள்ளைகளிடம் வெளிக்காட்டும் போது பிள்ளைகள் மனச்சோர்வடைவர். பெற்றோர் பிள்ளைகள் மீது அன்பு, அரவணைப்பினையும் பொருத்தமான வகையில் கண்டிப்பினையும் வழங்குதல் வேண்டும்

## உசாத்துணைகள்


1. அருள்மொழி, செ. 2017. கற்பித்தலுக்கான உளவியல், துர்க்கா அச்சகம், மட்டக்களப்பு.
2. மகேசன், ஏ. 2010. விசேட கல்வியும் ஆலோசனை வழங்கலும், ஹிரா அச்சகம், மட்டக்களப்பு.
3. சந்திரசேகரம், சோ. 2007. சமகால கல்வி முறைகளில் சில பரிமாணங்கள், சேமமடு பதிப்பகம், கொழும்பு,
4. Appaji korikana.(2020). Slow Lerners a universal problem & providing Educational opportunities to them to be a successful learner, International journals of social, Vol: 6.

5. Hartini,A.(2017). Learning Strategies for slow learners using the project based learning model in school, journals pendikan Inklusi, Vol:1.
6. Kalpana,M.(2018). Role of teachers & parents in honing their hidden talent of slow learners, International journal of advanced Research in Education & Technology, Vol: 5.
7. Vidya,S.(2014). A study of parent child relationship Among slow learners in higher secondary schools in Tiruchirapali city, journal of social science, Vol: 4.
8. Appana,R. (2018). Role of teacher & parents in education slow learners, International journals of Advanced research in education, Vol: 5.
9. Dalia zahanika. (2021). challenges facting family caregivers of children with Disability during covid-19 Pendamic in Palestinians, journal of primary care and community health, vol: 12.
10. Christine, P.( 2011). Slow learners: their psychology & educational programs Ronald press, vol: 8.

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

# வள்ளலார் திருவருட்பா தெலுங்கு மொழிபெயர்ப்பு - பன்முகப்பார்வை
# Vallalar Thiruvarutpa Telugu Translation - Multiview

**சத்தியராஜ் தங்கச்சாமி | Sathiyaraj Thangasamy**

தமிழ் உதவிப்பேராசிரியர், ஸ்ரீகிருஷ்ணா ஆதித்யா கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர் - 641 042
Assistant Professor in Tamil, Sri Krishna Adithya College of Arts and Science, Coimbatore - 641 042
9600370671, sathiyarajt@skacas.ac.in
https://orcid.org/0000-0002-6754-9095
DOI: 10.5281/zenodo.10222658

**ஆய்வுச்சுருக்கம்**

வள்ளலாரின் உலகியல் பார்வையும் உயிரியல் பார்வையும் மாறுபட்டவை. வாடிய பயிரைக் கண்டபொழுதெல்லாம் வாடினேன் எனப் பாடும்பொழுது அறிவு அடிப்படையில் குறைந்து நிற்கும் உயிர்களுக்குக் கூட மதிப்பளித்துள்ளார் வள்ளலார் எனத் தோன்றும். ஆனால் மனித சமுதாயம் உணவின்றித் தவிப்பதையும் பார்த்து வருந்துகின்றார் எனும் கருத்து இவ்விடத்து நிலவுவதை அறியலாம். இந்திய மொழிகளில் தெலுங்கு மொழியில் அவரின் திருவடிப் புகழ்ச்சி மொழிபெயர்ப்பு அமைந்திருக்கும் தன்மை குறித்துச் சுட்டிக் காட்டுவதாக இக்கட்டுரை அமைகின்றது. இந்த ஆய்வுக் கட்டுரை இணையத் தரவுகளை முதன்மையாகக் கொள்கின்றது.

**Abstract:** Vallalar's worldview diverges from a purely biological perspective. It appears that Vallalar extended his respect even to living beings experiencing a decline in knowledge, as reflected in his statement, "Whenever I saw a withered crop, I withered." However, it is acknowledged that there is an interpretation suggesting that his concern also encompasses the human society's struggle for sustenance. This viewpoint has been articulated in Indian languages, specifically in the context of the 'Tiruvadi Pugazhchi' translation in Telugu. This research paper primarily centers on web data to explore and analyze Vallalar's perspectives and their linguistic expressions in various Indian languages.

**திறவுச்சொற்கள் (Keywords):** வள்ளலார், திரு அருட்பா, தெலுங்கு, தமிழ், மொழிபெயர்ப்பு, இணையம், தரவு, திருவடிப் புகழ்ச்சி.

## முன்னுரை

இன்றைய காலக்கட்டத்தில் இணையம் என்பது அனைவரும் பயன்படுத்தி வரும் பொதுப் பயன்படாக மாறிவிட்டது. அச்சுநூலிற்கு அளிக்கக்கூடிய முக்கியத்துவத்தைக் காட்டிலும் இணையம் அல்லது மென்படித் (Soft copy) தரவுகளுக்கே அதிக முக்கியத்துவம் தருகின்றனர். மென்தரவுகளே (Soft data) அறிவியல்முறை சார்ந்த ஆய்வுகளுக்கு உறுதுணையாக அமைகின்றன. தரவாக்கத்திற்கும் (Data creation) நல்குகின்றன இணையத் தரவுகள் (Online data) எனில் மிகையில்லை. ஆகையால் அதை நோக்கிய பார்வையாக இவ்வாய்வு அமைந்து, வள்ளலாரின் "திருவடிப் புகழ்ச்சி" சிந்தனைகள் மொழிபெயர்க்கப்பட்டிருக்கும் பாங்கினையும் திருஅருட்பா.காம் எனும் இணையதளத்

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

தரவுகளின் மொழிபெயர்ப்பு முறையினையும் எடுத்து இயம்புவதாக இக்கட்டுரை அமைகின்றது.

**வள்ளலார் திருஅருட்பா - அறிமுகம்**

திருவருட்பா, வள்ளலாரால் பாடப்பெற்ற 5818 பாடல்களின் தொகுப்பாகும். இப்பாடல் ஆசிரிய விருத்த நடையில் அமைந்துள்ளது. இப்பாடல்கள் ஆறு தொகுப்புகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இத்தொகுப்புகள் திருமுறை எனவும் அவரது தொண்டர்களால் வழங்கப்படுகின்றன. எனினும் சைவத்திருமுறைகளான பன்னிரண்டு திருமுறைகள் என்பன வேறு என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இப்பாடல்கள் வள்ளலாரின் அனுபவங்களையும் ஆன்மீகப் பெரு உணர்வையும் விளம்புவன. அவற்றை வணிக முறையில் பதிப்பிக்க வேண்டாம் என்றும் வள்ளலார் கேட்டுக்கொண்டார். எனினும், வள்ளலாரின் தொண்டர்கள் அவரிடம் தொடர்ந்து வலியுறுத்தி இப்பாடல்களைப் பதிப்பிப்பதற்கான அனுமதியைப் பெற்றனர் என்பது குறிப்பிடத்தக்கது (விக்கிப்பீடியா).

**வள்ளலார் படைப்புகளின் மொழியாக்க முயற்சிகள்**

அச்சுநூலின் வழியாக வெளிவந்துள்ள படைப்புகள் எந்த மொழிகளுக்கு உரியதென ஆய்தல் வேண்டும். இணையத் தரவுகளில் வள்ளலாரின் படைப்புகளை அறிந்திட 'வள்ளலார், இராமலிங்க அடிகளார், திருவருட்பா, vallalar, Ramalinga Adigalar, Thiruvarutpa' போன்ற குறிச்சொற்கள் கொடுத்துக் கூகுள் தேடுபொறியில் தேடிப் பார்த்தால் பல தளங்கள் அறிய வருகின்றன. சான்றாகப் பின்வரும் இரு தளங்களைக் காட்டலாம்.

1. https://ta.wikipedia.org/s/a4
2. https://www.vallalar.org/tamil

இத்தளங்களுள் திருவருட்பா.காம் எனும் தளத்தில் இடம்பெற்றுள்ள மொழிபெயர்ப்புக் குறித்து அறிவோம்.

**வள்ளலார் படைப்புகள் - தெலுங்கு மொழியாக்கம்**

வள்ளலாரின் படைப்புகளுள் திருமுறை ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு ஆகிய படைப்புகள் மட்டும் திருவருட்பா.காம் தளத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவை தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி, அரபு, ரோமன் I, ரோமன் II ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

இம்மொழிகளுள் தெலுங்கு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள வள்ளலாரின் படைப்புகளின் பட்டியல் பின்வருமாறு அமைந்துள்ளது.

- முதல் திருமுறை
- இரண்டாம் திருமுறை
- மூன்றாம் திருமுறை
- நான்காம் திருமுறை
- ஐந்தாம் திருமுறை
- ஆறாம் திருமுறை

இவற்றுள் முதல் திருமுறையில் உள்ள பாடுபொருளை மட்டும் நோக்குவோம்.

**வள்ளலார் திருஅருட்பா - முதல் திருமுறை - தெலுங்கு மொழியாக்கம்**

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

வள்ளலார் திருஅருட்பா தமிழ் மூலத்தில் உள்ள முதல் திருமுறையில்,

திருவடிப் புகழ்ச்சி tiruvaṭi pugazhchi
விண்ணப்பக் கலிவெண்பா viṇṇappak kaliveṇpā
நெஞ்சறிவுறுத்தல் neñsaṟivuṟuttal
சிவநேச வெண்பா sivanēsa veṇpā
மகாதேவ மாலை makātēva mālai
திருவருண் முறையீடு tiruvaruṇ muṟaiyīṭu
வடிவுடை மாணிக்க மாலை vaṭivuṭai māṇikka mālai
இங்கித மாலை iṅkita mālai

என அமைந்துள்ளன. அவை தெலுங்கில்,

తిరువటిప్ పుకళ్చ్చి tiruvaṭi pugazhchi
విణ్ణప్పక్ కలివెణ్పా viṇṇappak kaliveṇpā
నెఞ్చఱివుఱుత్తల్ neñsaṟivuṟuttal
సివనేస వెణ్పా sivanēsa veṇpā
మకాతేవ మాలై makātēva mālai
తిరువరుణ్ ముఱైయీటు tiruvaruṇ muṟaiyīṭu
వటివుటై మాణిక్క మాలై vaṭivuṭai māṇikka mālai
ఇఙ్కిత మాలై iṅkita mālai

என அமைந்துள்ளன. இவற்றுள், திருவடிப்புகழ்ச்சி குறித்து இனி அறிவோம்.

### திருவடிப் புகழ்ச்சி - தெலுங்கு மொழிபெயர்ப்பு: நோக்குநிலை

மொழிபெயர்ப்பு என்பது திரும்பப் படைத்தல் எனும் தன்மையது. அதனுள் படைப்பாளரின் கொள்கை, அதிகாரம், அழகியல், அணுகுமுறை போன்றன கலந்து அமைவதற்கு வாய்ப்புண்டு. எவ்வாறிருப்பினும் படைப்பு அனுபவத்தை அடைந்து மகிழ்தல் எனும் ஒன்றை மையமாகக் கொண்டிருப்பது மொழிபெயர்ப்பு என இரவீந்தரநாத் தாகூர் கருதுவதாக க.பஞ்சாங்கம் கூறுகின்றார் (மொழியாக்கமெனும் படைப்புக்கலை, ப.110)[2]. அதுமட்டுமின்றி மொழியாக்கப் படைப்புக்கலை குறித்து இரவீந்தரநாத் தாகூர் கூறும்,

> ‘உங்களுடைய இந்த மொழிபெயர்ப்புகள் மறுபிறவி எடுத்தவை போலத் தோன்றுகின்றன. கவிதை ஆன்மா ஒரு உடம்பில் இருந்து மற்றொரு உடம்புக்குள் புலம் பெயர்ந்துள்ளது. மொழிபெயர்ப்பு என்பது ஒரு தொழில்நுட்பச் செயல்பாடல்ல; மாறாக அது ஒரு படைப்புச் செயல்பாடு’ (ப.111)[2]

இக்கருத்து உன்னிப்பாக நோக்கத்தக்கது. இனி மொழிபெயர்ப்பு வகைகள் குறித்து அறியலாம்.

### மொழியாக்க வகைகள்

மொழிபெயர்ப்பு என்பது ஒரு கலை. இருமொழிப் புலமை அல்லது பன்மொழிப் புலமை இருக்கும் பொழுது அது சிறப்புடன் அமைவதைக் காணலாம். அப்படிப்பட்ட மொழிபெயர்ப்பு சில வகைகளை உள்ளடக்கியது. அதனைப் பின்வரும் கருத்துக்கள் மூலம் அறியலாம்.

1. "ஒரே மொழிக்குள் நடைபெறும் உரைவளமும் ஒருவகை மொழிபெயர்ப்பு.
2. மொழி விட்டு மொழி மாற்றுவதே சரியான மொழிபெயர்ப்பு.
3. எழுத்து வடிவத்திற்கு நாட்டிய வகையில் அபிநயம் பிடிப்பதும் ஒருவகையான மொழிபெயர்ப்பு.

எனச் சிலர் கூறுகின்றனர் என்று வீ.சந்திரன் தனது மொழிபெயர்ப்பியல் அணுகுமுறைகள் என்ற நூலில் கூறிச் செல்லுகிறார். எந்நிலை அமையினும் மொழிபெயர்ப்பு என்று கூறுவதை விட மொழி ஆக்கம் என்று கூறப்படுவதே சரியென மா. சண்முக சுப்பிரமணியன் போன்றோர் கருதுகின்றனர்.

பொதுவாக மொழிபெயர்க்கும் பாணியில் மொழிபெயர்ப்பு ஆறு வகைகளாகப் பகுக்கப்படும். அவை வருமாறு:

சொல்லுக்குச் சொல் பெயர்த்தல் (Literal And Metaphrase Translation)
விரிவான மொழிபெயர்ப்பு (Amplification)
முழுமையான அல்லது சரியான மொழிபெயர்ப்பு (Close or Accurate Translation)
சுருக்கம் (Paraphrase or Abridgement)
தழுவல் (Adaptation)
மொழியாக்கம் (Transcreation)" [6]

என ஜோஸப்பின் டோரதி (தமிழ் இணையப் பாடம்) குறிப்பிடுவார். கா.சாகுல்ஹமீது தனது தமிழில் கவிதை மொழிபெயர்ப்பு எனும் நூலில் ஆண்டரே லெஃபவரெ என்பவரின் மொழிபெயர்ப்பு ஆய்வு குறித்துச் சுட்டிக்காட்டியுள்ளார். அதில் ஏழுவகை மொழிபெயர்ப்பைக் காணலாம். அவை வருமாறு;

14. ஒலியன் மொழிபெயர்ப்பு(Phonemic Translation)
15. சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பு (Literal Translation)
16. யாப்பு மொழிபெயர்ப்பு (Meterical Translation)
17. உரைநடை மொழிபெயர்ப்பு (Prose Translation)
18. சந்தமொழிபெயர்ப்பு(Rhyming Translation)
19. விடுநிலைப்பா மொழிபெயர்ப்பு(Blank Verse Translation)
20. விளக்கமொழிபெயர்ப்பு(Interpretation) (ப.41) [1]

இருப்பினும் மூன்று நிலையான மொழிபெயர்ப்பு வகைகளை மட்டும் அறிவோம்.

**ஒலிபெயர்ப்பு (Transliteration)**

மூலமொழியின் ஒலிப்பினைப் பெறுமொழியின் ஒலிப்பில் எழுதும் முறையை ஒலிபெயர்ப்பு (transliteration) எனப்படுகின்றது. சான்றாக "அ" எனும் தமிழ் எழுத்தை "a" என ஆங்கிலத்திலும் అ எனத் தெலுங்கிலும் எழுதலாம். "உனக்காக" எனும் தமிழ்ச் சொல்லை "unakkaaga" என ஆங்கிலத்திலும் "ఉనక్కాక" எனத் தெலுங்கிலும் எழுதிக் கொள்ளலாம். இவ்வாறு மொழிபெயர்க்கும் பொழுது,

> 'மூலமொழியின் ஒலியைப் பெறுமொழியில் தரமுயல்வது ஒலியன் மொழிபெயர்ப்பாகும். இம்மொழிபெயர்ப்பு மூலமொழியின் உணர்ச்சிப் பொருளைச் சிதைத்துவிடும் தன்மை கொண்டதாகும்.' (பக்.40-41) [1]

எனக் கூறுவது கவனிக்கத்தக்கது.

**மொழிபெயர்ப்பு (Translation)**

மொழிபெயர்ப்பு என்பது மூலமொழியின் சொல்லைப் பெறுமொழியின் சொல்லமைப்பில் எழுதும் முறைக்கு மொழிபெயர்ப்பு (translation) எனப்படுகின்றது. சான்றாக "உனக்காக" எனும் தமிழ்ச் சொல்லை "for you" என ஆங்கிலத்திலும் "మీ కోసం (மீ கோஸம்)" எனத் தெலுங்கிலும் ஆக்கிக் கொள்ளலாம். இவ்வாறு மொழிபெயர்ப்பைச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தல் எனும் வகைக்குள் அடக்கிப் பார்க்கலாம்.

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023

பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

**மொழியாக்கம் (Transcreation)**

மேற்சொன்ன இரண்டு நிலைகளிலும் மாறுபட்டது மொழியாக்கம் எனும் செயல்பாடு. இது மூலமொழியின் தொடரைப் பெறுமொழியின் தொடரமைப்பில் எழுதும் முறையை மட்டுமின்றி, பெறும் மொழியின் மொழியமைப்பிற்கு ஏற்பப் பெயர்த்து எழுதும் முறை மொழியாக்கம் (trans-creation) எனப்படுகின்றது. சான்றாக "உனக்காகவே நான் வாழ்கின்றேன்." எனும் தமிழ்த்தொடரை "I live for you" என ஆங்கிலத்திலும் "నీ కోసమే జీవిస్తున్నాను (நீ கோஸமே ஜீவிஸ்தந்நாநு - உனக்காகவே வாழ்கிறேன்)" எனத் தெலுங்கிலும் ஆக்கிக் கொள்ளலாம்.

**யாப்பு மொழிபெயர்ப்பு**

இது இந்தக் கட்டுரையுடன் நேரடித் தொடர்புடையது. ஆகையால் அம்மொழிபெயர்ப்புக் குறித்து அறியலாம்.

> ‘மூலநூலின் செய்யுளில் உள்ள அடி, சீர், தளை போன்றவற்றைப் பெறுமொழியில் அதே நிலையில் மாற்றியமைக்கும் முறையை யாப்பு மொழிபெயர்ப்பு என்பர். இவ்வகை மொழிபெயர்ப்பு யாப்பில் மட்டும் கவனம் செலுத்துவதால் மூலபாடத்தின் முழுமைத் தன்மையிலிருந்து விலகிவிடுகிறது எனலாம்.’ (சாகுல், ப.41) [1]

> ‘செய்யுள் மொழிபெயர்ப்பின் வகைகளைப் பகுத்துக்கூறும் ஆண்ட்ரே லெஃபவெரே. மூலநூலுக்கும் மொழிபெயர்ப்புக்கு மிடையே உள்ள ஒட்டுமொத்த முழுமைத் தன்மையை ஆராய்ந்து பார்க்காமல், பல்வேறு கூறுகளைத் தனித்தனியே ஆய்வு செய்துள்ளார். இதனால் கருத்தையும், வடிவத்தையும் பிரிக்க முடியும் என்ற வாதத்தை உருவாக்கிவிட்டார். லெஃபவெரேயின் இவ்வகைப்பாட்டைக் குறைகூறும் போப்போவிக் என்னும் மொழிபெயர்ப்பியல் அறிஞர். "மொழி பெயர்ப்பாளருக்கு மூலநூலின் ஒட்டுமொத்தக் கட்டமைப்பிலிருந்து வேறுபடும் உரிமையும், சுதந்திரமும் உண்டு. எப்பொழுதென்றால், மூலநூலின் கவிதையை உயிரோட்டத்தோடு மொழிபெயர்க்கும் பொழுது" என்கிறார்.’ (சாகுல், ப.42)[1]

ஆக மொழிபெயர்ப்புக் கோட்பாடுகளை உள்வாங்கி இவ்வாய்விற்கு உட்படுத்தி மொழிபெயர்க்கவில்லை இவ்வாய்விற்கு உட்படுத்தும் தளம். இவ்வாய்வு அந்தத் தளத்தினைக் குறை கூறுவதற்காக எழுதப்படவில்லை. மாறாக வருங்காலத்தில் மேம்படுத்திக் கொள்ளவேண்டும் எனும் நோக்கின் அடிப்படையில்தான் சில கருத்துக்கள் முன்வைக்கப்பெறுகின்றன.

**திருவடிப் புகழ்ச்சி - தெலுங்கு ஒலிபெயர்ப்புமுறை**

திருஅருட்பா தளத்தில் பின்வருமாறு தமிழ் மூலம் அமைந்துள்ளது.

> பரசிவம்சின்மயம் பூரணம் சிவபோக பாக்கியம் பரமநிதியம்
> பரசுகம் தன்மயம் சச்சிதா னந்தமெய்ப் பரமவே காந்தநிலயம்
> பரமஞா னம்பரம சத்துவம கத்துவம் பரமகை வல்யநிமலம்
> பரமதத் துவநிரதி சயநிட்க ளம்பூத பௌதிகா தாரநிபுணம்

இந்த மூலத்தினை அடிப்படையாக வைத்துத் தெலுங்கு ஒலிபெயர்ப்பு அமைந்துள்ளது. அது வருமாறு.

> పరసివంసిన్మయం పూరణం సివపోక పాక్కియం పరమనితియం
> పరసుకం తన్మయం సస్సితా నందమెయ్ప్ పరమవే కాందనిలయం
> పరమఞా నంపరమ సత్తువమ కత్తువం పరమకై వల్యనిమలం

పరమతత్ తువనిరతి సయనిట్క ళంపూత పౌతికా తారనిపుణం

இவ்வாறு மூலமொழியிலிருந்து பெறுமொழிக்கு மொழிபெயர்த்திருப்பது தேவையான ஒன்றாக இருக்கின்றது.

**திருவடிப் புகழ்ச்சி - மொழிபெயர்ப்பில் செய்திருப்பன**

திருவடிப் புகழ்ச்சியைத் தெலுங்கில் மொழிபெயர்க்க வேண்டும் எனும் நோக்கத்திற்காக மொழிபெயர்த்திருப்பது போல் தெரிகின்றது. எழுத்துப் பெயர்ப்பிலாவது தந்திருப்பது பாராட்டுக்குரியது.

**திருவடிப் புகழ்ச்சி - மொழிபெயர்ப்பில் செய்திருக்க வேண்டியன**

ஒலிபெயர்ப்புடன் சுருக்கமாகத் தெலுங்கில் விளக்கம் அளித்திருக்க வேண்டும். அது ஒரு குறையாக அமைந்துவிட்டது. அதைச் சரிசெய்ய வேண்டிய சில குறிப்புகளைப் பின்வருமாறு அறியலாம்.

மூலம்

பரசிவம்சின்மயம் பூரணம் சிவபோக பாக்கியம் பரமநிதியம்
பரசுகம் தன்மயம் சச்சிதா னந்தமெய்ப் பரமவே காந்தநிலயம்
பரமஞா னம்பரம சத்துவம கத்துவம் பரமகை வல்யநிமலம்
பரமதத் துவநிரதி சயநிட்க ளம்பூத பௌதிகா தாரநிபுணம்[7]

கூகுள் மொழிபெயர்ப்பு

పరశివంసిన్మయం పురాణం శివపోక పాఖ్యం పరమానిదీయమ్ ||
పరశుగం ధన్మయం సచిత నందమైప్ పరమవే కంఠ నిలయం
పరమంజ నంబరమ సత్తువమ కథువం పరమగై వల్యనిమలమ్
పరమదత్ దువనిరతి సయనిద్క లమ్భూత బౌతిక ధరణిపుణం

தளத்தில் உள்ள மொழிபெயர்ப்பு

పరసివంసిన్మయం పూరణం సివపోక పాక్కియం పరమనితియం
పరసుకం తన్మయం సస్సితా నందమెయ్ప్ పరమవే కాందనిలయం
పరమఞా నంపరమ సత్తువమ కత్తువం పరమకై వల్యనిమలం
పరమతత్ తువనిరతి సయనిట్క ళంపూత పౌతికా తారనిపుణం[7]

சி.சாவித்ரி - ஒலிபெயர்ப்பு

పరశివం చిన్మయం పూరణం శివభోగ
భాగ్యం పరమ నిత్యం
పరసుఖం తన్మయం సచ్చిదా
నంద మెయ్ పరమవేకాంత నిలయం
పరమ జ్ఞానం పరమ సత్వ మహత్వం
పరమ కైవల్య నిమలం
పరమ తత్వ నిరతిశయ నిక్కళంభూత
భౌతికా ధార నిపుణం

இம்மூலப்பாடலுக்குரிய தமிழ் விளக்கத்துடன்,

பாடலடி :-

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

பரசிவம் - சின்மயம் - பூரணம் சிவபோக பாக்கியம் - பரம நிதியம்

பொருள் :-

திருவடி மேலான சுபத்தைத் தருகின்ற பொருள், ஞான உருவம், பூரண நிறைவு, சிவானுபவமாகிய செல்வம், மேலான அருட்செல்வமுடையது.

பாடலடி :-

பரசுகம் தன்மயம் சச்சிதானந்தம் மெய்ப் பரம ஏகாந்த நிலையம்

பொருள் :-

மேலான இன்பம், பரசொரூபம், என்றும் உள்ள பொருள், அதன் ஒளி, அதன் இன்பம், மேலான தனியிட மானது.

பாடலடி :-

பரமஞானம் பரமசத்துவம் மகத்துவம் பரம கைவல்ய நிமலம்

பொருள் :-

மேலான அறிவு, மேலான சத்துவ குணம், பெருமை, கைவல்யமாகிய பரிசுத்த வஸ்த்துவானது.

பாடலடி:-

பரமதத்துவம் நிரதிசயம் நிட்களம் பூத பௌதிகா தார நிபுணம்

பொருள்:-

மேலான உண்மைப் பொருள், தனக்கு மேல் ஒன்றில் லாதது, உருவமில்லாதது, பஞ்ச பூதங்களாகிய பௌதிகங்களுக்கு ஆதாரமாய் இருக்கின்ற கூர்த்த நுட்பமுடையது. (4) [7]

இப்பாடலுக்குரிய விளக்கத்துடன் தெலுங்கு மொழிபெயர்ப்பைக் கூகுள் லென்சு தருவதைக் காண்க.

పరశివం - చిన్మయం - పురాణం శివవోక
పరమ నిధి ధన్యమైనది
తిరువడి అత్యంత పవిత్రమైన వస్తువు, జ్ఞాన స్వరూపం, పరిపూర్ణమైన నెరవేర్పు, శివుని సంపద, మహోన్నతమైన అరుదైల్వం.
పరశుగం ధన్మయం సచ్చితానందం మెయిప్ పరమ ఏకాంత స్టేషన్
అత్యున్నతమైన ఆనందం, స్వరూపం, శాశ్వతమైన పదార్థం, దాని కాంతి, దాని ఆనందం, అత్యున్నత వ్యక్తిత్వం.
పరమజ్ఞానం పరమసత్తువ మాగత్తువ పరమ కైవల్య నిమలమ్
ఉన్నతమైన జ్ఞానము, అధిక సత్వగుణము, అహంకారము, ఉన్నతమైన చేతిపనులు పవిత్రమైన వస్తువు.
పరమధత్తువం నిరతిశయం నిద్కలం భూత బౌతిక తార నిపుణం
తనకు తానే అంటిపెట్టుకోని, నిరాకారమైన అత్యున్నతమైన నిజమైన వస్తువు, పంచ బుద్ధులయిన భౌతిక జీవులకు మూలమైన కుర్తా తంత్రం. (4)

**கொள்வோர் - கொடையோர்: திருவடிப் புகழ்ச்சி**

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

திருவடிப் புகழ்ச்சி மொழிபெயர்ப்பை கொள்வோர் யார்? இந்நிலையில் இம்மொழியாக்கம் என்பது ஒரு வெற்றிடப் பரப்பையே உள்ளடக்கியுள்ளது.

**கொள்வோர் - மனநிலை**

இம்மொழியாக்கத்தைக் கொள்வோரின் மனநிலையானது மூலமொழியின் படைப்பை அறிந்து கொண்டோம் எனும் நிலையே நிலவும். ஆனால் முழுமையாக அறிந்துகொண்டோமா என்ற நிலையில் வெற்றிடமே நிலவும். சமசுகிருதச் சொற்களைத் தானே வள்ளலார் பயன்படுத்துகின்றார் என எண்ணலாம். ஆனால் அதிலும் பின்தங்கிய நிலையே நிலவுகின்றது.

**கொடையோர் - மனநிலை**

இந்த மொழிபெயர்ப்பின் மூலம் மூலமொழியாளர் பெறுமொழிக்கு ஒரு கருத்துச் சென்றுவிட்டது என்ற மனநிலையே மேலோங்கும் என்பதை உணரலாம்.

**நிறைவுரை**

இந்த ஆய்வு, ஒரு மொழிபெயர்ப்பானது சிறப்பாக அமைய வைத்திருக்க வேண்டிய அளவீடுகளைச் சுட்டிக்காட்டியுள்ளதோடு திருஅருட்பா.காம் தளத்தில் அமைந்துள்ள தெலுங்கு மொழிபெயர்ப்பின் தன்மையைச் சுட்டிக்காட்டியுள்ளது.

## Bibliography

1. சாகுல்ஹமீது கா., (2004), தமிழில் கவிதை மொழிபெயர்ப்பு, சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்.
2. திசை எட்டும் மொழியாக்கக் காலாண்டிதழ், ஏப்ரல் - ஜூன் 2013, குறிஞ்சிப்பாடி.
3. Thiruarutpa Homepage - https://www.thiruarutpa.org/Thirumurai/First/telugu, last accessed 2023/11/14
4. Wikipedia Homepage - https://ta.wikipedia.org/s/6n3, last accessed 2023/11/14
5. TamilWiki Homepage - https://tamil.wiki/wiki//திருவருட்பா#மூன்றாம்_திருமுறை8, (இதை அடிப்படையாக வைத்துத் தெலுங்கு மொழிபெயர்ப்பு அமைந்திருக்கலாம்), last accessed 2023/11/14
6. TamilVU Homepage - https://www.tamilvu.org/library/l5F31/html/l5F31ind.htm, last accessed 2023/11/114
7. TamilVU Homepage - https://www.tamilvu.org/library/l5F31/html/l5F31i31.htm (இந்தப் பதிப்பும் மகாலிங்கம் பதிப்பும் மூன்றாம் திருமறையில் முதல் திருமறையாக அமைந்துள்ளது.), last accessed 2023/11/14

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

# க.பொ.த உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் வினைத்திறனின்மையானது, அவர்களின் எதிர்கால செயற்பாடுகளில் ஏற்படுத்தும் தாக்கம் The Impact on the G.C.E A/L students due to lack of guidance on professional skills

**இராசையா தேவேந்திரன் | Rassaiah Devendran**

ஆசிரியர், மமா/வ/அருணோதயா இந்து கல்லூரி, குருந்தோயா, கந்தபளை, இலங்கை. Teacher, Cp/W/Arunodhaya Hindu College, Kurundhoya, Kandapola, Sri Lanka.

DOI: 10.5281/zenodo.10222558

**ஆய்வுச் சுருக்கம்**

"க.பொ.த. உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் வினைத்திறனின்மையானது, அவர்களின் எதிர்காலச் செயல்பாடுகளில் ஏற்படுத்தும் தாக்கம்" என்ற பொருண்மையில் வலப்பனை கல்வி வலய தமிழ்மொழி மூல 1AB, 1C பாடசாலைகளை மையமாகக் கொண்டு ஆய்வு முன்னெடுக்கப்படுகிறது. க.பொ.த. உயர்தரக் கல்வி நிறைவின் பின்னர், கல்வியைத் தொடந்து செல்லும் மாணவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. இதனால் பல மாணவர்களின் தொழில் வாழ்க்கை கேள்விக்குறியாகிறது. மாணவர்களின் உயர்தரக் கல்வியின் பின்னரான தொழில் வாழ்க்கையானது, மாணவர்களின் இரண்டாம் நிலைக் கல்வியிலேயே தங்கியுள்ளது.

ஆய்வுத் தலைப்பின் அருஞ்சொற்களாகிய வினைத்திறனின்மை, தொழில்சார் வழிகாட்டல், மாணவர்களின் எதிர்காலச் செயல்பாடுகள், க.பொ.த. உயர்தர மாணவர்கள் போன்றவற்றின் பல்வேறு தேடல்களின் தொகுப்பான இலக்கிய மீளாய்வு ஆய்வுக்கு வலுச் சேர்க்கின்றது.

ஆய்வுக்காக வலப்பனை கல்வி வலயத்தின் நான்கு தமிழ்மொழி மூல க.பொ.த. உயர்தர பாடசாலைகளும் தெரிவுசெய்யப்படுகின்றன. ஆய்வுப் பிரச்சினையை உறுதிப்படுத்தும் தரவுத் தேடல்களுக்காக நோக்க மாதிரிகளின் அடிப்படையில் பாடசாலைகள், தரம் 12, தரம் 13 வகுப்புக்கள் மற்றும் அதிபர்கள், தொழில் வழிகாட்டல் ஆலோசகர்கள் ஆகியோர் நோக்க மாதிரி அடிப்படையில் தெரிவுசெய்யப் படுகின்றனர். மாணவர் தெரிவானது, 662 மாணவர்களுள் 150 மாணவர்கள் இலகு எழுமாற்று மாதிரிகளாக தெரிவுசெய்யப் படுகின்றனர். அதில் கல்வி கற்கும் 323 மாணவர்களிலிருந்து 50 மாணவர்களும் விடுகைப்பெற்ற 339 மாணவர்களிலிருந்து 100 மாணவர்களும் தெரிவு செய்யப்படுகின்றனர். இம்மாணவர் தெரிவானது க.பொ.த உயர்தரக் கல்வியை நிறைவு செய்த மாணவர்களில் 50 மாணவர்களும், க.பொ.த உயர்தரக் கல்வியை நிறைவு செய்த மாணவர்களில் 50 மாணவர்களும் உள்ளடங்களாக 100 மாணவர்கள் தெரிவு செய்யப்படுகின்றனர்.

மாதிரிகளிடமிருந்து பெற்றுக்கொள்ளப்பட்ட தரவுகள் அளவுசார் மற்றும் பண்புசார் முறைகளில் பொருத்தமான மென்பொருள் முறைமைகளினூடாக

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023

பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

பகுப்பாய்வு, கலந்துரையாடல் போன்ற செயற்பாடுகளுக்குள் உள்வாங்கப்படுகின்றன. பகுப்பாய்வினூடாக பல்வேறு முடிவுகளைக் கண்டறிய முடிகின்றது. பாடசாலை மட்டங்களில் தொழில் வழிகாட்டல் ஆலோசனைச் சேவையின் மந்தகரமான இயக்கம், மாணவர் விருப்பங்களுக்கு முக்கியத்துவம் வழங்காமை, திருப்தியற்ற மாணவர் ஒத்துழைப்புகள், தொழில் வழிகாட்டலில் புதிய விடயங்களை உள்வாங்காமை, பகுதிநேர தொழில் வழிகாட்டல் செயற்பாடுகள் இடம்பெறாமை, மாணவர்கள் தாம் கற்கும் காலங்களில் தொழில்சார் தகைமைகளை வளர்ப்பதற்கான வாய்ப்புக்கள் காணப்படாமை, நிபுணத்துவமிக்க மனித வளங்களை தொழில் வழிகாட்டலில் எதிர்பார்க்கின்றமை போன்ற முடிவுகளைக் கண்டறிய முடிகிறது. இதனைத் தொடர்ந்து, பாடசாலை மட்டங்களில் வினைத்திறனான தொழில் வழிகாட்டல் முன்னெடுப்புகளுக்கான விதந்துரைப்புகளும் எடுத்தியம்பப்படுகி ன்றன.

**Abstract**

The study is focused on the theme "The Impact on G.C.E A/L Students due to the Lack of Guidance on Professional Skills," specifically examining Tamil medium 1AB and 1C schools in the Walapana Education Zone. The low number of students pursuing education beyond the G.C.E Advanced Level is a concern, potentially affecting the professional lives of many students. The professional trajectories of these students post-higher education hinge on the quality of their secondary education. A comprehensive literature review on topics such as unemployment, career guidance, future activities of students, and higher education further fortifies the research.

To address the research issue, four Tamil medium G.C.E Advanced Level high schools in the Walapane education zone are selected for the study. Data collection involves purposive sampling of schools, grade 12 and grade 13 classes, principals, and career guidance counsellors. Out of 662 students, 150 are selected for the study, including 50 from a pool of 323 current students and 100 from a pool of 339 former students who have completed G.C.E Advanced Level education. Quantitative and qualitative methods are employed to analyze, interpret, and discuss the collected data through appropriate software systems.

The analysis may reveal insights into the slow implementation of career guidance counselling services at school levels, a lack of emphasis on student preferences, suboptimal student collaborations, inadequate incorporation of new issues in career guidance, a dearth of part-time career guidance activities, limited opportunities for students to develop professional skills during their learning, and an expectation for professional human resources in career guidance. Subsequently, recommendations are proposed for enhancing effective career guidance initiatives at the school level.

**திறவுச்சொற்கள் (Keywords):** க.பொ.த, உயர்தர மாணவர், தொழில்சார், வினைத்திறன், தாக்கம்.

## அறிமுகம்

“கைத்தொழில் உலகிற்கு மாணவர்களை ஆயத்தப்படுத்துவதும் அதனுடன் தொடர்புடைய ஒரு மனப்பான்மையை ஏற்படுத்துவதுமாகும்” என்ற தேசிய இலக்கினை எய்தும் நோக்குடன் மாணவர் சமூகம் ஊக்குவிக்கப்பட வேண்டும் என்பதுடன் வழிகாட்டப்படல் வேண்டும் என்பதனையும் வெகுவாக எதிர்பார்க்கும் வகையில் இவ் ஆய்வு முன்னெடுக்கப்படுகிறது. இன்றைய காலத்தில் மாணவர்கள் மூன்றாம் நிலைக் கல்வியை அடைவது மட்டுமே தேசிய இலக்கு என்ற எண்ணத்துடன் சில பாடசாலைகள் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை முன்னெடுத்துச் செல்கின்றன. சில காரணங்களால் உயர்கல்வி தகுதியை இழக்கும் மாணவர்களுக்குப் பொருத்தமான தொழில் தெரிவுக்கான வழிகாட்டல் வழங்கப்படுவதில்லை.

ஒவ்வொரு பாடசாலையும் மாணவர்களின் அதீத திறமைகளை மட்டுமே கவனத்தில் கொள்வதுடன், தேசிய பாடசாலைகள் தமது மதிப்பீட்டுப் பெறுபேறுகளை உயர்த்திக்கொள்ள மாணவர்களின் பரீட்சை பெறுபேறுகளிலேயே கவனம் செலுத்துகின்றன. இன்றைய நடைமுறைகளில் உளவியல் அறிந்த ஆசிரியர்கள் உள்வாங்கப் பட்டாலும் மாணவர்களுக்கு பொருத்தமான தொழிலுக்குரிய வழிகாட்டல் வழங்கப்படுவதில்லை. அனைத்து மாணவர்களும் கல்விக் கலையை இலகுவில் பெற்றுவிட முடியாது. ஆனால் ஒவ்வொரு மாணவனும் ஏதோ ஒரு வகையில் தொழிற்கலையை தன்னுள் கொண்டிருப்பான் என்பது திண்ணம்.

1C பாடசாலைகளும் மேற்கூறிய இயல்புகளை அப்படியே பின்பற்றுகின்றன. பாடசாலை என்பது சமூகத் தேவைகளை பூர்த்தி செய்வதாய் அமைய வேண்டும். மாணவர்களை சகல தொழிற்துறைகளிலும் திறமையானவர்களாக உள்வாங்குவதே இலக்கு என்பதை பாடசாலையின் குறிக்கோள் மூலமாக எய்த முயற்சிக்க வேண்டும். இருப்பினும் அதிகமான பாடசாலைகளில், மாணவர்கள் கலை, வர்த்தகம், விஞ்ஞானம், கணக்கியல் என உயர்தரக் கல்வியை தெரிவு செய்து கற்கும் வாய்ப்பு மட்டுப்படுத்தப்பட்டதாகவே காணப்படுகிறது. இத்தகைய பாடசாலைகள் பரீட்சை பெறுபேறுகளை முன்னேற்றமடைய செய்யும் வளங்களை மட்டும் கொண்டிருக்கின்றன. ஆனால் தொழில்சார் வழிகாட்டல்களை மாணவர்களுக்கு வழங்கும் வகையிலான வளங்களின்றி இயங்கிக் கொண்டிருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

இன்றைய பாடசாலைகளில் ஆளணி வளங்கள், பௌதீக வளங்களில் சமநிலையற்ற தன்மைகள் காணப்படுகின்றன. அனைத்து வளங்களையும் கவனத்தில் கொண்டு மாணவர்களை பெற்றார்கள் பாடசாலைகளுக்கு அனுமதிக்க விரும்புவதில்லை. உயர்க்கல்விக்கான தகுதி என்ற ஒற்றை எண்ணத்துடனேயே செயற்படுகின்றனர். பாடசாலைகள் உயர்மட்ட குறிக்கோள்களை கைவிட்டு பெறுபேறுகளை அடிப்படையாகக் கொண்டு “பாடசாலைகளுக்குள் முதன்மை” என்ற நிலைப்பாட்டுக்கே முக்கியத்துவம் கொடுக்கின்றன. ஆனால் மாணவர்களை தொழில் உலகிற்கு ஆயத்தப்படுத்த வேண்டும் என்பதனை மறந்து விடுகின்றன என விமர்சனப் பார்வையில் குறிப்பிடப்படுகிறது.

## இலக்கிய மீளாய்வு

ஆய்வுத் தலைப்பின் அருஞ்சொற்களாகிய வினைத்திறனின்மை, தொழில்சார் வழிகாட்டல், மாணவர்களின் எதிர்கால செயற்பாடுகள், க.பொ.த உயர்தர மாணவர்கள் என்பனவற்றை உள்வாங்கிய பல்வேறு தேடல்களின் தொகுப்பாக இலக்கிய மீளாய்வு அமைகிறது.

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

**இலங்கையில் தொழில் வழிகாட்டல் ஆலோசனை சேவையின் வரலாறு**

1960களில் இலங்கையின் கல்வி அமைச்சினால் தொழில் வழிகாட்டல் சேவையொன்று ஆரம்பிக்கப்பட்டது. இதன்படி ஆசிரியர்களுக்குப் பயிற்சியளித்தலும், மாணவர்கள் தொடர்பாக திரட்டிய அறிக்கையும் பேணப்பட்டு வந்தது. இத்துறையில் ஆசிரிய ஆலோசகர்கள் தொடர்பான அத்தாட்சிப் பத்திரம் பரீட்சையொன்று பரீட்சைத் திணைக்களத்தினால் நடாத்தப்பட்டு தொழில் வழிகாட்டிகள் நியமிக்கப்பட்டார்கள். எனினும் தொழில் வழிகாட்டலுக்காகப் பாடசாலைகளில் கடமை சார்ந்த ஓர் அமைப்பு முறை நிறுவப்பட்டதன் காரணத்தினாலும் பாடசாலைப் பாடத்திட்டத்தினூடாக மாணவர்களை வேலை உலகுக்குத் தயார் செய்தல் தொடர்பாக, கூடிய கவனஞ் செலுத்தப்பட்டதினாலும் எழுபதாம் தசாப்தத்தின் ஆரம்ப காலத்திலேயே இந்தத் தொழில் வழிகாட்டல் சேவை சீர்குலையலாயிற்று.

ஆயினும் இலங்கையின் பாடசாலைகளில் கல்வி கற்கின்ற மாணவர்களுக்கும் அதே போன்று பாடசாலையை விட்டு வெளியேறுகின்ற பிள்ளைகளுக்கும் பாடசாலை மட்டத்தில் ஒழுங்கு செய்யப்படுகின்ற தொழில் வழிகாட்டல் மற்றும் ஆலோசனை வழங்கும் நிகழ்ச்சித் திட்டங்களை நிறுவுகின்ற தேவை இன்று வரவேற்கப்படுகின்றது. (திறந்த பல்கலைக்கழகம், 2010)

**தொழில் வழிகாட்டல் கோட்பாடுகள்**

தொழில் வழிகாட்டல் தொடர்பாக பல்வேறு கோட்பாடுகள் கல்வியாளர்களால் உருவாக்கப்பட்டன. அவ்வாறு எழுச்சி கொண்ட வடிவங்களில் சிலவற்றை இங்கு அடையாளம் காட்டலாம். இதன்படி, கின்ஸ்பேர்க்கின் கோட்பாடு, டொனால்ட் சுபரின் கோட்பாடு, ஆன்றௌவின் கோட்பாடு, ஹெலண்டின் கோட்பாடு, ரொபேட் கொப் பொக்கின் கோட்பாடு, கிட்டின் கோட்பாடு, சவிக்சின் பின்நவீனத்துவக் கோட்பாடு, மாக்சியக் கோட்பாடு என்பன முக்கியமானவைகளாகும். (ஜெயராசா, 2011)

**தொழில்சார் வழிகாட்டலைத் தூண்டும் காரணங்களை அடையாளப்படுத்தல்**

இன்றைய காலத்தில் தொழில்சார் வழிகாட்டல் மற்றும் தொழில்சார் கல்வியின் தேவைக்கு பல்வேறு காரணிகள் துணை சேர்க்கின்றன. அதன்படி, பெற்றோர்களால் பிள்ளைகளுக்குத் தொழில் தொடர்பாக அறிவூட்டப்படல், தொழில்கள் சார்பான வரையறுக்கப்பட்ட புலக்காட்சி, கோளமயமாதல், நவீன கைத்தொழில், வர்த்தகத்தின் வளர்ச்சி, அறிவின் விரிவாக்கமும் கற்றவர்களின் எண்ணிக்கை அதிகரிப்பும் தொழிற்சந்தையில் ஒவ்வொரு தொழிலுக்குமுள்ள நிரம்பலை அதிகரிக்கச் செய்துள்ளமை, தொழில்கள் பற்றிய அறிவு மாணவர்களுக்குக் கிடைக்கப்பெறாதுள்ளமை, புதிய பாடங்களுக்கும் புதிய தொழில்களுக்குமிடையே உள்ள இணைப்பு மாணவருக்கு அறிவிக்கப்பட வேண்டியுள்ளமை, கூட்டிணைப்புப் பல்கலைக் கழகங்களின் உருவாக்கம் தொழில் துறையிலே புதிய பரிமாணங்களைத் தோற்றுவித்துள்ளமை, தொழில்களுக்கும் கல்விக்குமிடையேயுள்ள தொடர்புகள் விரைந்து மாறி வருகின்றமை, தொழில் செய்துகொண்டே கற்றல், கற்றுக் கொண்டே தொழில் செய்தல் என்ற தோற்றப்பாட்டின் வளர்ச்சி, தொழில்களின் பதிலீடுகள் பற்றிய அறிவு முக்கியத்துவம் பெறதொடங்கியுள்ளமை, உலகெங்கும் நிகழ்ந்த கல்வி விரிவாக்கல் நடவடிக்கைகள், தொழில்களின் வளர்ச்சி போன்ற அம்சங்கள் தொடர் தொழில் வழிகாட்டலை உலகம் முழுவதும் விரிவடையச் செய்கின்றன. (ஜெயராசா, 2011)

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

### பாடசாலைகளில் தொழில்சார் வழிகாட்டல் செயற்பாடுகள்

பாடசாலைகளில் சில விசேட செயற்பாடுகளை மேற்கொள்வதன் மூலம் தொழில்சார் வழிகாட்டலை பயனுள்ளதாக்கிக் கொள்ள முடியும். இதன்படி, மாணவர் ஆற்றல்கள், தகைமைகள் போன்றவற்றை பொருத்தமான மதிப்பீடுகள் அவற்றை வளர்ப்பதற்குரிய செயற்திட்டங்களை நடைமுறைப்படுத்துதல், தொழில் ஆர்வப் பரீட்சைகளை நடாத்தி மாணவர்களிடமுள்ள தொழில்சார் நாட்டங்களை அறிந்து அதனடிப்படையில் தொழில் வழிகாட்டலை மேற்கொள்ளல், தொழில்சார் அட்டவணைகளை காட்சிப்படுத்தலின் ஊடாக மாணவர்களை தொழிலுக்கு வழிகாட்டுதல், தனியாக, குழுவாக தொழில்சார் வழிகாட்டலை தொடர் தொழில் ஆற்றுப்படுத்தல் செயற்பாடாக துறைசார் வல்லுநர்களை அழைத்து மேற்கொள்ளல், தொழிநுட்ப கல்லூரிகள் மற்றும் பாடசாலைகளை இணைத்துச் செயற்பட வைக்கும் வகையில் திறன்விருத்தி உதவியாளர், மனிதவள அபிவிருத்தி உதவியாளர், தொழிநுட்ப கல்லூரிகளின் "தொழில் வழிகாட்டல் ஆலோசகர்" போன்றோருடன் இணைந்து பாடசாலையின் தொழில்சார் வழிகாட்டல் சேவை செயற்பட வேண்டும். (சிவானந்தன், 2012)

### ஆய்வு முறையியல்

"க.பொ.த. உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் வினைத்திறனின்மையானது அவர்களின் எதிர்கால செயற்பாடுகளில் ஏற்படுத்தும் தாக்கம்" எனும் ஆய்வு தலைப்பின் ஊடாக வலப்பனை கல்வி வலயத்தின் தமிழ்மொழி மூல க.பொ.த உயர்தர பாடசாலைகளை மாதிரி பாடசாலைகளாக கொண்டு இவ் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. "அளவை நிலை ஆய்வின்" ஊடாக இவ் ஆய்வு முன்னெடுத்து செல்லப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

### ஆய்வுச் சிக்கல்

இவ்வாய்வானது "க.பொ.த உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் வினைத்திறனின்மையானது அவர்களின் எதிர்காலச் செயற்பாடுகளில் ஏற்படுத்தும் தாக்கம்" தொடர்பில் ஆய்வு செய்யப்படுகிறது. பாடசாலைகளின் உயர்தரக் கல்வியை பூர்த்தி செய்யும் மாணவர்களில் பெரும்பாலான மாணவர்கள் தமது திறமைக்கு ஏற்ற தொழிற்துறை தெரிவுகளின்றி கேள்விக்குறியான வாழ்க்கையை அனுபவிப்பதனை முதன்மைப்படுத்திய கல்வித் துறையின் ஆய்வுச் சிக்கலாக முன்வைக்கப்படுகிறது.

### சிக்கல் கூற்று

"பரீட்சை மையக்கல்வி கலைத்திட்டம், தொழில் வழிகாட்டலுக்கான வளங்களின் பற்றாக்குறை, தொழில் வழிகாட்டல் ஆலோசனைச் சேவையின் மந்தகரமான இயக்கம் போன்ற பல்வேறு காரணங்கள் காரணங்கள் க.பொ.த. உயர்தர மாணவர்களுக்கான தொழில் வழிகாட்டலின் வினைத்திறனின்மையை உருவாக்கி, அவர்களின் எதிர்கால செயற்பாடுகளில் பாதகமான தாக்கங்களை ஏற்படுத்துகின்றன."

### ஆய்வு நோக்கங்கள்

ஆய்வு பிரச்சினையை மையப்படுத்தி உருவாக்கப்பட்ட ஆய்வு தலைப்பினை அடிப்படையாயக் கொண்டு ஆய்வு பொது நோக்கமும், சிறப்பு நோக்கங்களும் வடிவமைக்கப்பட்டுள்ளன.

### பொது நோக்கம்

மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் வினைத்திறனின்மையானது அவர்களின் எதிர்கால செயற்பாட்டில் ஏற்படுத்தும் தாக்கத்தினை அறிதல்.

### சிறப்பு நோக்கங்கள்

1. பாடசாலைகளில் வினைத்திறனற்ற தொழில்சார் வழிகாட்டல் இடம்பெறுகின்றதா? என்பதனை அறிதல்.
2. பாடசாலைகளின் வினைத்திறனற்ற தொழில்சார் வழிகாட்டலால் மாணவர்களின் எதிர்கால வாழ்க்கை பாதிக்கப்படுவதனை இனங்காணுதல்.
3. தொழில்சார் வழிகாட்டலுக்கும், மாணவர்களுக்கும் இடையிலான தொடர்பு பற்றி அறிதல்.
4. மாணவர்களின் கல்வியறிவு அடைவுமட்டம், இணைபாடவிதான செயற்பாடுகளுக்கு ஏற்ப பொருத்தமான தொழில்சார் வழிகாட்டல் வழங்குதலின் பயன்களை அறிதல்.
5. மாணவர்களுக்கான வினைத்திறனற்ற தொழில்சார் வழிகாட்டலின் பாதகமான விளைவுகளை தவிர்ப்பதற்கான ஆலோசனைகளை முன்வைத்தல்.

### ஆய்வ வடிவமைப்பு

இவ்வாய்வானது நுவரலியா மாவட்டத்தின் வலப்பனை கல்வி வலயத்திற்குட்பட்ட தமிழ்மொழி மூல பாடசாலைகளை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இக்கல்வி வலயத்தின் 1AB, 1C வகைப் பாடசாலைகள் ஆய்விற்காகத் தெரிவு செய்யப்பட்டுள்ளன. இவ்வாய்விற்காக ஆய்வு நோக்கத்தின் அடிப்படையில் ஆய்வு வினாக்கள் உருவாக்கப்பட்டு, இவ்வினாக்களின் அடிப்படையில் ஆய்வுக்கருவிகள் வடிவமைக்கப்பட்டுள்ளன. வடிவமைக்கப்பட்ட ஆய்வுக்கருவிகளின் மூலம் ஆய்வு மாதிரிகளாகத் தெரிவு செய்யப்பட்டோரிடமிருந்து தரவுகள் திரட்டப்பட்டன. திரட்டப்பட்ட தரவுகள் அளவு, பண்பு ரீதியான முறைகளில் பகுப்பாய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ளன. பெறப்பட்ட பெறுபேறுகளுக்கமைவாக முடிவுகளும், விதந்துரைப்புக்களும் முன்வைக்கப்பட்டுள்ளன. இவ்வாறாக இவ்வாய்வானது ஐந்து அத்தியாயங்கள் கொண்டதாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்தவகையில் இவ்வாய்வானது தற்கால, நிகழ்கால உண்மை நிலைகளை ஆராய்ந்து சரியான தகவல்களை அளிக்கும் அளவைநிலை ஆய்வாக ஒழுங்கமைக்கப்பட்டுள்ளது.

### மாதிரித் தெரிவு

ஆய்வுக்காக வலப்பனை கல்வி வலயத்தின் நான்கு தமிழ்மொழி மூல க.பொ.த. உயர்தர பாடசாலைகளும் தெரிவுசெய்யப்படுகின்றன. தேவைக்கருதி இந்நான்கு பாடசாலைகளும் நோக்க மாதிரி அடிப்படையில தெரிவு செய்யப்பட்டுள்ளன. இது போலவே ஆய்வாளனது தேவையின் அடிப்படையில் தரம் 12, தரம் 13 வகுப்புக்கள் மற்றும் தெரிவு செய்யப்பட்ட பாடசாலைகளின் நான்கு அதிபர்கள், நான்கு தொழில் வழிகாட்டல் ஆலோசகர்கள் ஆகியோர் நோக்க மாதிரி அடிப்படையில் தெரிவுசெய்யப்படுகின்றனர். மாணவர் தெரிவானது, 662 மாணவர்களுள் 150 மாணவர்கள் என்ற அடிப்படையில் ஆய்வாளனால் இலகு எழுமாற்று மாதிரி அடிப்படையில் தெரிவுசெய்யப்படுகின்றனர். அதில் 2015 ஆம் ஆண்டு உயர்தரக் கல்வியை தொடரும் 323 மாணவர்களிலிருந்து 50 மாணவர்களும், விடுகைப்பெற்ற 339 மாணவர்களிலிருந்து 100 மாணவர்களும் தெரிவு செய்யப்படுகின்றனர். க.பொ.த உயர்தரக் கல்வியை நிறைவு செய்த மாணவர் தெரிவானது, க.பொ.த உயர்தரக் கல்வியை நிறைவு செய்த மாணவர்களிலிருந்து 50 மாணவர்களும், க.பொ.த உயர்தரக் கல்வியை நிறைவு செய்த மாணவர்களிலிருந்து 50 மாணவர்களும் உள்ளடங்களாக

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 9 | இதழ் : 36 | நவம்பர் | 2023 | Vol.: 9 | Issue: 36 | November | 2023
பல்துறை - பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ் | இருமொழி | காலாண்டிதழ்
Multi - Disciplinary International E-Journal for Tamil Studies | Bi-Lingual | Quarterly

மொத்தமாக 100 மாணவர்கள் தெரிவு செய்யப்படுகின்றனர். இவ்வாறு தெரிவு செய்யப்பட்ட 150 மாணவர்களே இலகு எழுமாற்று மாதிரி அடிப்படையில் தெரிவுசெய்யப்படுகின்றனர்.

தெரிவு செய்யப்பட்ட மாணவர்களுக்கு வினாக்கொத்துக்களும், அதிபர்கள் மற்றும் வழிகாட்டல் ஆலோசகர்களுக்கு நேர்காணல்களும் மற்றும் ஆவணங்கள் என்ற அடிப்படையில் தரவுகள் பெற்றுக்கொள்ளப்பட்டன.

**பகுப்பாய்வு**

ஆய்வின் தரவுப்பகுப்பாய்வானது வினாக்கொத்துக்கள், நேர்காணல், ஆவணம் போன்றன மூலம் பெற்றுக்கொள்ளப்பட்ட தரவுகளினூடாக முன்னெடுக்கப்படுகிறது. மாணவர்களிடமிருந்து வினாக்கொத்து மூலமும் அதிபர்கள் மற்றும் வழிகாட்டல் ஆலோசகர்களிடம் நேர்காணல் முறை மூலமும் தரவுகள் பெற்றுக்கொள்ளப்பட்டன. தரவுப்பகுப்பாய்வானது, அளவு ரீதியானதும் பண்பு ரீதியானதுமான முறைமைகளில் முன்னெடுக்கப்படுகின்றன. பகுப்பாய்வு தரவு எண் ரீதியானதாக மாற்றப்பட்டு அட்டவணையாக்கம் செய்யப்பட்டு இருபரிமாண, முப்பரிமாண வரிப்படங்கள், சலாகை வரைபுகள், வட்டவரைபுகள் மூலமாக முன்வைக்கப்படுகிறது. பகுப்பாய்வு செயன்முறைக்காக Excel முறைமை பயன்படுத்தி நேர்த்தியான, நம்பகமான பகுப்பாய்வாக அமைகிறது.

பாடசாலைகளின் தொழில்சார் வழிகாட்டல் ஆலோசனை சேவையின் தரமான இயக்கத்தன்மை தொடர்பாக தரவுகள் பெற்றுக் கொள்ளப்பட்டன. இக்கூற்று தொடர்பாக கல்வி பயிலும் மாணவர்கள் ஏற்கிறேன் என 25.8 சதவீதமானவர்களும், ஓரளவு எற்கிறேன் என 66.15 சதவீதமானவர்களும், ஏற்கவில்லை என 8.05 சதவீதமானவர்களும் குறிப்பிடுவதுடன், விடுகை மாணவர்கள் 12.22 சதவீதமானவர்கள் ஏற்கிறேன் எனவும், 61.88 சதவீதமானவர்கள் ஓரளவு ஏற்கிறேன் எனவும், 26 சதவீதமானவர்கள் ஏற்கவில்லை எனவும் குறிப்பிடும் நிலையில் பாடசாலைகளில் க.பொ.த. உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டல் ஆலோசனைச் சேவையின் செயற்பாடு குறைவாக காணப்படுகிறது என கொள்ளலாம்.

பாடசாலைகளின் தொழில்சார் வழிகாட்டல் பகுதிநேர செயற்பாடுகள் தொடர்பாக தரவுகள் பெற்றுக்கொள்ளப்பட்டன. இக்கூற்று தொடர்பாக கல்வி பயிலும் மாணவர்கள் ஏற்கிறேன் என 4.52 சதவீதமானவர்களும், ஓரளவு எற்கிறேன் என 32.36 சதவீதமானவர்களும், ஏற்கவில்லை என 63.12 வீதமானவர்களும் குறிப்பிடுவதுடன், விடுகை மாணவர்கள் 6.68 சதவீதமானவர்கள் ஏற்கிறேன் எனவும், 23.15 சதவீதமானவர்கள் ஓரளவு ஏற்கிறேன் எனவும், 70..17 சதவீதமானவர்கள் ஏற்கவில்லை எனவும் குறிப்பிடும் நிலையில், பாடசாலைகளில் தொழில்சார் வழிகாட்டல் பகுதிநேர செயற்பாடுகள் குறைவாக காணப்படுகின்றன என கொள்ளலாம்.

பாடசாலைகளின் தொழில்சார் வழிகாட்டலின் ஊடாக தொழில் உலகிற்கு ஏற்ப பாடங்களை தெரிதலும், அதற்கான வழிகாட்டலும் தொடர்பாக தரவுகள் பெற்றுக்கொள்ளப்பட்டன. இக்கூற்று தொடர்பாக கல்வி பயிலும் மாணவர்கள் ஏற்கிறேன் என 48.16 சதவீதமானவர்களும், ஓரளவு எற்கிறேன் என 46.17 சதவீதமானவர்களும், ஏற்கவில்லை என 5.67 சதவீதமானவர்களும் குறிப்பிடுவதுடன், விடுகை மாணவர்கள் 40.32 சதவீதமானவர்கள் ஏற்கிறேன் எனவும், 32.25 சதவீதமானவர்கள் ஓரளவு ஏற்கிறேன் எனவும் 27.43 சதவீதமானவர்கள் ஏற்கவில்லை எனவும் குறிப்பிடும் நிலையில் பாடசாலைகளில் க.பொ.த உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் ஊடாக தொழில் உலகிற்கு பாடங்களை தெரிவதற்கான வழிகாட்டல் குறைவாக காணப்படுகிறது என கொள்ள முடியும்.

பாடசாலை காலங்களில் மாணவர்கள் தொழில்சார் தகைமைகளை வளர்த்துக்கொள்ளல் தொடர்பான தரவுகள் பெற்றக்கொள்ளப்பட்டன. இக்கூற்று தொடர்பாக கல்வி பயிலும் மாணவர்கள், விடுகை மாணவர்கள் ஊடாக பெற்றுக்கொள்ளபட்ட தரவுகளின்படி, பாடசாலை காலங்களில் மாணவர்கள் தொழில்சார் தகைமைகளை வளர்த்துக்கொள்வதற்கான வாய்ப்புக்கள் குறைவாகவே காணப்படுகிறது எனலாம்.

பாடசாலைகளில் மாணவர்கள் தொழில்சார் செயற்பாடுகளுக்கு உளவிருப்பத்துடன் ஈடுபடுதல் தொடர்பாக கல்வி பயிலும் மாணவர்கள், விடுகை மாணவர்கள் ஊடாக பெற்றுக்கொள்ளபட்ட தரவுகளின்படி, பாடசாலை காலங்களில் மாணவர்கள் தொழில்சார் செயற்பாடுகளில் உள விருப்பத்துடன் ஈடுபடலானது குறைவாகவே காணப்படுகிறது எனலாம்.

மாணவர்களை பாட ஆசிரியர்கள், தொழில் வழிகாட்டல் ஆலோசகர்கள் இணைந்து தொழிலுக்கு வழிகாட்டுதல் தொடர்பாக தரவுகள் பெற்றுக்கொள்ளப்பட்டன. இக்கூற்றினை கல்வி பயிலும் மாணவர்கள், விடுகை மாணவர்கள் 60 சதவீதத்திற்கும் அதிகமானோர் இல்லை என நிராகரிப்பதன் காரணமாக பாடசாலைகளில் பாட ஆசிரியர்கள், தொழில் வழிகாட்டல் ஆலோசகர்கள் இணைந்து மாணவர்களை தொழிலுக்கு வழிகாட்டுதல் குறைவாக காணப்படுகிறது என கொள்ளலாம்.

மாணவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளப்பட்ட தரவுகளின் அடிப்படையில், மாணவர்களின் கல்வியிறிவு, இணைப்பாடவிதான செயற்பாடுகள் என்பனவற்றிற்கேற்ப தொழில் வழிகாட்டல் செயற்பாடானது பாடசாலை மட்டங்களில் குறைவாகவே காணப்படுகிறது என கொள்ளலாம். அத்துடன் கால, சூழல் தேவைக்கேற்ற தொழில் வழிகாட்டல் செயற்பாடும் குறைவாகவே பாடசாலைகளில் காணப்படுகிறது என கொள்ள முடியும்.

கிடைக்கப்பெற்ற தரவுகளின் படி தொழில் வழிகாட்டலில் தொழில் நிபுணத்துமிக்க வழிகாட்டல் ஆலோசகர்களை உள்வாங்க வேண்டும் என 65.93 சதவீதமானவர்கள் கூறுவதுடன், தொழில் வழிகாட்டலில் புதிய விடயங்களை உள்வாங்க வேண்டும் என 78.43 சதவீதமானவர்களும் குறிப்பிடுகின்றனர். இதன்படி பார்க்கும் போது தொழில் தொழில் நிபுணத்துவமிக்க வழிகாட்டல் ஆலோசகர்களை உள்வாங்குதல், புதிய விடயங்களுடன் தொழில் வழிகாட்டல் செயற்பாடுகளை முன்னெடுத்தல் என்பன பாடசாலை மட்டங்களில் வெகுவாக எதிர்பாரக்கப்படுகிறது என கொள்ளலாம்.

**முடிவுகளும் விதந்துரைப்புக்களும்**

க.பொ.த. உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டலின் வினைத்திறனின்மையானது, அவர்களின் எதிர்கால செயற்பாடுகளில் ஏற்படுத்தும் தாக்கம்" என்ற ஆய்வு தலைப்பினைக் கொண்டு உருவாக்கப்பட்ட ஆய்வு வினாக்களின் தரவுப்பகுப்பாய்வின் பெறுபேறுகளைக் கொண்டு, முடிவுகளும் விதப்புரைகளும் எடுத்தியம்பப்படுகின்றன.

**முடிவுகள்**

1. க.பொ.த. உயர்தர மாணவர்களுக்கான தொழில்சார் வழிகாட்டல் ஆலோசனைச் சேவையின் செயற்பாடானது ஓரளவாகவே காணப்படுகிறது.
2. பகுதிநேர செயற்பாடுகளின் ஊடாக தொழில்சார் வழிகாட்டல் செயற்பாடுகள் முன்னெடுத்தல் மிகவும் குறைவாகவே காணப்படுகிறது.
3. க.பொ.த உயர்தர மாணவர்கள் தொழில் உலகிற்கு ஏற்ப பாடங்களை தெரிவு செய்தலும், அதற்கான வழிகாட்டலும் ஓரளவாகவே காணப்படுகிறது.

4. மாணவர்கள் தொழிலுக்காக பாடசாலை காலங்களில் தமது தகைமைகளை வளர்த்துக் கொள்வதற்கான வாய்ப்புக்கள் ஓரளவாகவே காணப்படுகிறது.
5. பாடசாலைகளின் தொழில்சார் வழிகாட்டல் செயற்பாடுகளில் மாணவர்கள் உள விருப்பங்களுடன் ஈடுபடும் தன்மையானது சராசரியாகவே காணப்படுகிறது.
6. பாட ஆசிரியர்கள், வழிகாட்டல் ஆலோசகர்கள் இணைந்து மாணவர்களை தொழிலுக்கு வழிகாட்டுதல் செயற்பாடானது மிகவும் குறைவாகவே காணப்படுகிறது.
7. மாணவர்களின் கல்வியறிவு, இணைப்பாடவிதான செயற்பாடுகளுக்கு ஏற்ப தொழில் தெரிவுக்கான வழிகாட்டலானது மிகவும் குறைவாகவே காணப்படுகிறது.
8. காலத்தினதும், சூழலினதும் தேவைக்கேற்ப ஏற்ப பொருத்தமான தொழில்களுக்கு மாணவர்களை வழிகாட்டுதல் செயற்பாடானது குறைவாகவே காணப்படுகிறது.
9. தொழில் வழிகாட்டலில் நிபுணத்துவம் கொண்ட வழிகாட்டல் ஆலோசகர்களை உள்வாங்குவதற்கு அதிகமாக விரும்புகின்றனர்.
10. க.பொ.த உயர்தர மாணவர்கள் தொழில் வழிகாட்டலில் புதிய விடயங்களை உள்வாங்குவதனை விரும்புகின்றனர்.

**விதந்துரைப்புக்கள்**

தேசிய, மாகாண, வலய மட்ட உதவிகளுடன் சிறப்புத் தகைமைகளை கொண்ட தொழில் வழிகாட்டல் ஆலோசகர்களை உள்வாங்கி, சிறந்த மேற்பார்வைகளுடன் வினைத்திறனான தொழில் வழிகாட்டல் ஆலோசனைக் குழுவை பாடசாலை மட்டங்களில் தாபித்தல்.

காலை மற்றும் மாலை நேரங்களிலும், வாராந்த, தவணை விடுமுறை நாட்களிலும் மாணவர்களை தொழில் வழிகாட்டல் செயற்பாடுகளில் உள்வாங்குதல். இதற்காக நாளாந்த, வாராந்த, மாதாந்த, வருடாந்த தொழில் வழிகாட்டல் நேர ஒதுக்கீட்டு திட்டங்களுடன் தொழில் வழிகாட்டல் செயற்பாடுகளை முன்னெடுத்தல் சிறப்பாக அமையும்.

வலப்பனை கல்வி வலயத்தின் தமிழ்மொழி மூல உயர்தர பாடசாலைகளானது, தேசிய பாடசாலைகளாக தரமுயர்த்தப்பட்டு தொழிலுலகிற்கேற்ப பாடங்களை கற்பதற்கும், தொழில்கள் தொடர்பில் அறிந்து கொள்வதற்கும் வளங்களைப் பெற்றுக் கொடுக்கப்படல் வேண்டும். புதிதாக வரக்கூடிய தொழில்கள் தொடர்பாக பத்திரிகைகள், இணையத்தளங்கள், சஞ்சிகைகள், அறிவித்தல் பலகைகள், சுவரொட்டிகள், நிறுவன அறிவிப்புகள் போன்ற வளங்களினூடாக மாணவர்களுக்கு தொழில்கள் தொடர்பில் தெளிவுபடுத்தல்.

பாடசாலை காலங்களில் மாணவர்கள் தமது தொழில்சார் தகைமைகளை வளர்த்துக் கொள்வதற்கான வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுக்கப்பட வேண்டும். பாடசாலை காலங்களில் தொழில் நிறுவனங்களில் விசேட சலுகைகளுடன் கற்கைநெறிகளை தொடர்வதற்கான வாய்ப்புக்கள் ஏற்படுத்தி கொடுக்கப்பட வேண்டும். அரச, தனியார் தொழில் நிறுவன உதவிகளுடன் பாடசாலை காலங்களில் மாணவர்கள் NVQ 4,5,6 என நிறைவு செய்து தேசிய தொழிற் தகைமை பட்டங்களை பெறுவதற்கான வாய்ப்புக்களை ஏற்படுத்தி கொடுக்க வேண்டும்.

தொழில் வழிகாட்டல்களில் மாணவர்கள் உள விருப்பங்களுடன் ஈடுபடுவதற்கான வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். மாணவர்கள் தொழில்சார் எண்ணப்பாடுகளை முன்வைப்பதற்கான வாய்ப்புக்களை வழங்குவதுடன், தொழில்சார் உள்ளடக்கங்களை மாணவர்கள் விரும்பும் வகையில் முன்வைக்க முனைய வேண்டும்.

மனித வளங்களான அதிபர்கள், ஆசிரியர்கள், வழிகாட்டல் ஆலோசகர்கள், மாணவர்கள் இணைந்த ஒரு சுற்றுவட்ட செயன்முறையில் தொழில் வழிகாட்டல் செயன்முறை

வினைத்திறனான இடைத்தொடர்புகளின் ஊடாக பாடசாலை மட்டங்களில் முன்னெடுக்கப்பட வேண்டும்.

மாணவர்களின் கல்வியறிவு, இணைப்பாடவிதான செயற்பாடுகள் என்பனவற்றைக் கவனத்தில் கொண்டு விசேட வேலைத் திட்டங்களினூடாக தொழில் வழிகாட்டல் செயற்பாடுகளை முன்னெடுத்தல். மாணவர் தொழில்சார் திறன்களை தனித்தனியே அணுகி மாணவர்களின கல்வியறிவு – தொழில் தொடர்பு, விசேட தகைமைகள் - தொழில் தொடர்பு, இணைப்பாடவிதான செயற்பாடுகள் - தொழில் தொடர்பு என்ற கட்டமைப்பில் மாணவர்களை தொழிலுக்காக வழிநடத்தப்பட வேண்டும்.

காலநிலை, சூழல், பிரதேச தேவைகளுக்கேற்ப பொருத்தமான தொழில் வழிகாட்டல் செயற்பாடுகளை க.பொ.த உயர்தர மாணவர்களின் மத்தியில் முன்னெடுத்தல்.

தொழில் வழிகாட்டல்களில் தொழில்சார் நிபுணத்துவமிக்க வழிகாட்டல் ஆலோசகர்களை உள்வாங்குதல். பட்டதாரிகளையொத்த, குறித்த தொழில் தொடர்பில் 3 – 5 அல்லது 5 – 10 வருட அனுபவம் கொண்ட தொழில் வழிகாட்டல் ஆலோசகர்களை உள்வாங்கி மாணவர்களை தொழிலுக்காக வழிகாட்டுதல். தொழில் ரீதியாக புத்தாக்க நுட்பங்களை கொண்ட வழிகாட்டல் ஆலோசகர்களை உள்வாங்குதல் சிறப்பாக அமையும்.

பொருத்தமானதும், சிறந்ததுமான வளங்களினூடாக தொழில்களுடன் தொடர்புடைய புதிய விடயங்களை உள்வாங்கி மாணவர்களை தொழிலுக்காக வழிகாட்டுதல். மாவட்டத்தில் காணப்படும் முக்கிய தொழிற்பயிற்சி நிலையங்களில் மாணவர்கள் தொழில்சார் புதிய விடயங்களை கற்றுக்கொள்வதற்கான வாய்ப்புக்களை ஏற்படுத்திக்கொடுத்தல்.

மேற்கண்டவாறு வலப்பனை கல்வி வலய தமிழ்மொழி மூல உயர்தர பாடசாலைகளில் ஆய்வு முடிவுகளுக்காக முன்வைக்கப்பட்ட விதந்துரைப்புக்களை பின்பற்ற முனையும்போது மாணவர்களின் தொழில்சார் பாதகமான எதிர்கால தாக்க செயற்பாடுகளைக் குறைத்துக் கொள்ள முடியும் என ஆய்வாளரால் கருத்துரு முன்வைக்கப்படுகிறது.

**துணைநின்றவை**

1. அருள்மொழி,செ.(2008). கல்வி ஆய்வு முறைகள், ராஜா புத்தக இல்லம், மட்டக்களப்பு இலங்கை.
2. கணபதி,க.(1993). கல்வி மனவியல் துணைகள், சங்கர் பிரிண்டர்ஸ், சென்னை 600042.
3. சந்தானம்,எஸ். உம் கணபதி,வி.(2002). கல்விசார் அறைகூவல்கள், சாந்தா பப்ளிசர்ஸ், சென்னை.
4. சந்திரசேகரன்,சோ.(2008). சமகாலக் கல்வி முறைகளின் சில பரிமாணங்கள், சேமமடு பதிப்பகம், யாழ்ப்பாணம், இலங்கை.
5. சந்திரசேகரன்,சோ.(2004). கல்வி – ஒரு பன்முகநோக்கு, உமா பதிப்பகம், மட்டக்களப்பு, இலங்கை.
6. சிவானந்தன்,ப.(2011). பாடசாலை தொழில்சார் வழிகாட்டல் – ஆசிரியம், சி.பி.சி பிரஷ், கொழும்பு, இலங்கை.
7. சின்னத்தம்பி,மா.(2008). பாடசாலையும் சமூகமும், குமரன் புத்தக இல்லம். கொழும்பு, இலங்கை.
8. சின்னத்தம்பி,மா.(2007). கல்வியின் பொருளியல், குமரன் புத்தக இல்லம், கொழும்பு, இலங்கை.

9. சிவநடேஸ்,செ.(2006). பாடசாலை அபிவிருத்தி, கல்விச்சங்கம், கிழக்குப் பல்கலைக்கழகம், மட்டக்களப்பு இலங்கை.
10. சின்னத்தம்பி,மா.(2005). இலங்கையின் கல்விச்செலவு, விஸ்டம் பப்ளிகேசன்ஸ், மட்டக்களப்பு இலங்கை.
11. வல்வை ஆனந்தராஜ்,ந.(2005). தேசியத்தை நோக்கிய கல்வி, நந்தி பதிப்பகம், இலங்கை.
12. கிருஷ்ணபிள்ளை,வி.(2009). வழிகாட்டலும் ஆலோசனையும், சேமமடு பதிப்பகம், யாழ்ப்பாணம், இலங்கை.
13. கிருஷ்ணபிள்ளை,வி.(2001). வழிகாட்டலும் ஆலோசனையும், கே.எஸ்.யூ கிராப்பிக்ஷ், இலங்கை.
14. ஜெயராசா,சபா.(2011). கல்வியில் தொடர் தொழில் வழிகாட்டல், சேமமடு பதிப்பகம், யாழ்ப்பாணம், இலங்கை.
15. ஜெயராசா,ச. உம் சந்திரசேகரன்,சோ.(2009). கல்வியலும் நிகழ்பதிவுகளும் , யாழ்ப்பாணம், இலங்கை.
16. ஜெயராசா,ச.(2007). கலைத்திட்டம், அகவிழி வெளியீடு, இலங்கை.
17. ஜெயராசா,சபா.(2006). கல்வியில் புதிய சீர்திருத்தங்கள், அகவிழி, கொழும்பு, இலங்கை.
18. ஜெயசாரா,சபா.(2002). கல்வி ஆய்வு முறையியல், யாழ்ப்பாண கல்வி ஆய்வு கழகம். இலங்கை.
19. ஜெயராசா,ச.(2001). கல்விச் சீர்மியம், போஸ்கோ வெளியீடு, நல்லூர், யாழ்ப்பாணம், இலங்கை.
20. Ministry of Human Resource Development. (2000). Education for All National Action, Ministry of Education, Sri Lanka.
21. Trochim, M.K. (2002). Research Methods Knowledge Base, Cornell University. Newyork.
22. Mathewson, R. H. (1962). Guidance Policy and Practice, New York: Harper and Row Publishers.
23. கல்வி வழிகாட்டலும் ஆலோசனை கூறலும், (2010). தொகுதி (1) இலங்கை திறந்த பல்கலைக்கழகம், இலங்கை.
24. கமலநாதன்,தி.(2005). இடைநிலைப்பாடசாலைகளில் வழிகாட்டல் ஆலோசனைச் சேவை, அகவிழி வெளியீடு, இலங்கை.
25. சிவானந்தன்,ப.(2012). பாடசாலை தொழில்சார் வழிகாட்டல், ஆசிரியம் வெளியீடு, இலங்கை.
26. சின்னத்தம்பி,மா.(ஜனவரி 2006). பாடசாலைகளில் வழிகாட்டல் புதிய தேவை, அகவிழி வெளியீடு, இலங்கை.
27. பகிரதன்,ச.(2015). தொழில்வாண்மை உளவளத்துணை கற்கை நெறி, வீரகேசரி வார இதழ் இலங்கை.
28. நிரேஷ்குமார்,ம.(2007). இன்றைய காலத்தின் தேவை தொழில்சார் கல்வி, அகவிழி வெளியீடு, இலங்கை.
29. https://www.facebook.com/notes/10151201619429671/masihudeen inaamullaha

